ஜூபிடர் & சங்கீதா

தயாரிப்பு



# ஜமீன்தார்

டைரக்ஷன் ஸ்டூடியோ

P.V. கிருஷ்ணன் .... சென்ட்ரல்

# ஆகஸ்ட் 22 முதல்
# தென்னாடெங்கும் வெளிவருகிறது




ஸ்ரீ சுகுமாரின்

# சின்னதுரை

வடுவூராரின் இருமன மோஹினிகள்

கதையைத் தழுவியது

M.S. PICTURES RELEASE

எம்.எஸ்.பிக்சர்ஸ்·ராயப்பேட்டை·சென்னை.14




# பொருளடக்கம்

மலர் 12 இதழ் 3 | 1952 ஆகஸ்டு 17 | நந்தன ௵ ஆவணி 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## பூம் பூம் மாடு!

பிரஜா கட்சியையும், சோஷலிஸ்டு கட்சியையும் இணைப்பது சம்பந்தமாக ஸ்ரீ அசோக் மேத்தாவுக்கும் ஸ்ரீ டி. பிரகாசத்துக்கும் பேச்சு வார்த்தைகள் நடந்தன.

## தவிடு பொடி!

தடுப்புக் காவல் மசோதாவின் முதல் பிரேரணையை இந்தியப் பார்லிமெண்டில் எதிர்க்கட்சியார் பலமாக எதிர்த்தனர். எதிர்ப்பு வாதங்களைத் தவிடுபொடி செய்து உள் நாட்டு மந்திரி கட்ஜு மசோதாவை நிறைவேற்றினார்.




மலர் 12 | இதழ் 3

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# தமிழ்த் தாயின் அழைப்பு

தெய்வத் தமிழ் நாடு குமரி முனையிலிருந்து வடவேங்கடம் வரையில் அநாதி காலமாக நிலை பெற்றிருப்பது. தமிழன்னையின் ஆட்சி மேற்கூறிய எல்லைகளைக் கடந்து தெற்கே இலங்கை, வடக்கே இமயம், மேற்கே ஆப்பிரிக்கா கண்டம், கிழக்கே பிஜித் தீவு வரையில் பரவியிருப்பது. உலகில் தமிழர்கள் எங்கெங்கே சென்று என்னென்ன தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் தமிழன்னையின் அன்புத் தளையானது அத்தனை பேரையும் ஒன்று சேர்த்துப் பிணைக்கும் சாதனமாயிருக்கிறது.

“நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்!”

என்றார் கம்பர் பெருமான். தமிழின் பெருமையை முதன் முதலில் உலகம் அறியப் பறைசாற்றிய அகஸ்திய முனிவரைப் பற்றிக் கம்பர் அவ்விதம் கூறினார். இதிலிருந்து கம்பருக்கு முற்பட்ட காலத்திலேயே தமிழ் மொழியின் ஆட்சி தமிழ் நாட்டின் எல்லைகளைக் கடந்து கடல் கடந்த பிரதேசங்களிலெல்லாம் வியாபித்திருந்தது என்பது நன்கு வெளியாகிறது.

தமிழகத்தில் வாழ்ந்திருந்த நம் முன்னோர்கள் சாதி சமய வர்க்க வேற்றுமைகளின்றித் தமிழ் மொழியைப் போற்றி வளர்த்து வந்தார்கள். ஆத்திகர்களும் நாத்திகர்களும் சைவர்களும் வைஷ்ணவர்களும் புத்தர்களும் ஜைனர்களும் முஸ்லிம்களும் கிறிஸ்துவப் பாதிரிமார்களும் தமிழ்த்தாயின் திருப்பணியில் ஈடுபட்டிருந்தார்கள். அரண்மனையில் வாழ்ந்த மன்னர்களும் வறுமையில் ஆழ்ந்த புலவர்களும் காட்டில் தவம் செய்த முனிவர்களும் வீட்டில் தறி நெய்த கவிஞர்களும் தமிழை வளர்த்தார்கள். தமிழன்னையின் சந்நிதியில் மற்ற வேற்றுமைகளையெல்லாம் மறந்து 'தமிழர்கள்' என்ற உணர்ச்சியுடன் சகோதர நேயம் பூண்டு அளவளாவி மகிழ்ந்தார்கள்.

தமிழ் அன்புக்கு இத்தகைய ஒன்றுசேர்க்கும் சக்தி இருப்பதினாலேதான், உலகின் பழம் பெரும் பாஷைகளாகிய கிரீக், லத்தீன் முதலிய பல மொழிகளைப்போல் தமிழ் மொழியும் புத்தக பாஷையாக மட்டும் ஆகிவிடாமல், இன்றைக்கும் ஜீவசக்தியுடன் இயங்கி வளர்ந்து கொண்டு வருகிறது.

* * *

இந்நாளில் சமூக சீர்திருத்தங்களில் பற்றுள்ளவர்கள் என்று சொல்லிக் கொள்வோர் சிலர் தமிழிலுள்ள பெரும்பாலான இலக்கியச் செல்வங்களை “எரிப்போம்; அழிப்போம்!” என்று முன்வந்திருக்கிறார்கள். இவர்கள் இக்காலத்தில் கொண்டிருக்கும் கொள்கைகளுக்கு மாறுபட்ட கொள்கைகள் அப்பழந் தமிழ் நூல்களில் விரவியிருப்பதைக் காரணமாகச் சொல்கிறார்கள். இது பகுத்தறிவுக்கு முற்றும் மாறுபட்ட செய்கையாகும்.

புத்தர்களும் ஜைனர்களும் இயற்றிய தமிழ்க் காவியங்களை நாம் படிப்பதினால் நாம் புத்த மதத்தையோ, சமண மதத்தையோ சார்ந்தவர்களாகி விடமாட்டோம், தமிழில் விளங்கிய நூலைப் படித்தால், கிறிஸ்தவர்கள் ஆகிவிட மாட்டோம். சைவர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களைப் படித்தால் வைஷ்ணவர்கள் ஆகி விடமாட்டார்கள். தேவார திருவாசகங்களைப் படித்தால் வைஷ்ணவர்கள் விஷ்ணுவுக்கு அபசாரம் செய்தவர்களாகார்கள்.

ஷேக்ஸ்பியர் நாடகங்களில் எத்தனையோ ராஜாக்களையும் ராணிகளையும் பற்றிய கதைகள் வருகின்றன. அவற்றைப் படிக்கும் இக் காலத்து அமெரிக்கர்கள் அமெரிக்கக் குடியரசுக்குத் துரோகம் செய்தவர்களாகி விடமாட்டார்கள். எட்டாவது ஹென்றி அரசனைக் குறித்த நாடகத்தைப் படிப்பதால், பலதார மணத்தை ஒப்புக் கொண்டவர்களாகி விடமாட்டார்கள்.

சாதி சமய சமூக விஷயங்களில் அவரவர்களுடைய கொள்கைகளை அழுத்தமாகப் பின் பற்றிக் கொண்டு, தமிழ்த் தாயின் தொண்டில் பரிபூரணமாக ஈடுபடலாம். பழந்தமிழ் இலக்கியங்களைப் படித்து மகிழ்வுறலாம். இதற்கு மாறாக, “கொளுத்து

வோம்; போக்குவோம்" என்று சொல்கிறவர்கள் அறியாதவர்கள் என்பதோடு, துரதிர்ஷ்டசாலிகள் என்றும் சொல்ல வேண்டும்.

தமிழ் இன்பத்தின் மிகப் பெரும் பகுதியை அவர்கள் இழந்து விடுகிறார்கள்.

தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட்டு மேன்மை பெறுவதற்கு அருமையான ஒரு சாதனத்தையும் அவர்கள் புறக்கணித்து விடுகிறார்கள்.

* * *

பழந் தமிழ்ச் செல்வத்தைப் போற்றிப் பாதுகாத்து, புதிய துறைகளில் தமிழ் மொழியை வளர்க்கும் நோக்கத்துடன் ஆறு ஆண்டுகளுக்கு முன்பு "தமிழ் வளர்ச்சிக் கழகம்" தோன்றியது. சாதி, சமய, இன, வர்க்க வேற்றுமைகளையும், அரசியல் கட்சி வேறுபாடுகளையும் கடந்த முறையில், தமிழன்பர்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் பணி செய்யக் கூடிய வழிகளில், இக் கழகம் இது காறும் தொண்டு ஆற்றி வருகிறது. கழகத்தின் ஆதரவில் ஆண்டு தோறும் தமிழ் விழா நடத்தப் பட்டு வருவதை நேயர்கள் அறிவார்கள். மதுரை, திருவாரூர், கோயமுத்தூர், யாழ்ப்பாணம் ஆகிய நான்கு இடங்களிலும் சிறப்பாகத் தமிழ் விழாக்கள் நடைபெற்றன. யாழ்ப்பாணத்தில் சென்ற ஆண்டில் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் அவர்களின் தலைமையில் நடந்த தமிழ் விழா, நேரில் கண்டவர்கள் என்றும் மறக்க முடியாத வைபவங்களுடன் நடந்தேறியது.

இந்த ஆண்டில் நிகழும் ஆகஸ்டு மாதம் 22, 23, 24ந் தேதிகளில் சென்னைமா நகரில் தமிழ் விழா நடத்த ஏற்பாடாகியிருக்கிறது.

முதன் மந்திரி ராஜாஜி தமிழ் விழாவைத் துவக்கி வைக்கும் பொறுப்பை ஏற்றிருக்கிறார்.

நம் காலத்துத் தமிழ் முனிவர் திரு வி. கல்யாணசுந்தரனார் தமிழ் விழாவுக்குத் தலைமை தாங்கி நடத்துகிறார்.

வழக்கம்போல் இந்த ஆண்டிலும் தமிழ் விழாவில் மூன்று பகுதிகள் உண்டு. சிற்ப சித்திரப் பகுதி, வான சாத்திரப் பகுதி, இலக்கியப் பகுதி ஆகிய மூன்றுக்கும் தனித் தலைவர்கள் உண்டு.

சென்ற ஆண்டில் யாழ்ப்பாணத்தில் நடந்த தமிழ் விழாவின் வரவேற்பு சபைத் தலைவராக இருந்து விழாவை நடத்திக் கொடுத்தவரும், தற்சமயம் இலங்கை அரசாங்கத்தில் அமைச்சர் பதவி வகிப்பவருமான ஸ்ரீ எஸ். நடேச பிள்ளை கலை மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார்.

"எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காண் என்று கும்மியடி!"

என்ற பாரதியார் வாக்கை இன்று மெய்ப்படுத்தி வரும் ஸ்ரீமதி ராஜேசுவரி அம்மையார் வான சாத்திர மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார்.

தமிழன்பில் திளைத்தவரும் ஜஸ்டிஸ் கட்சியின் ஏக பிரதிநிதியாக இன்று சென்னைச் சட்ட சபையில் வீற்றிருப்பவருமான ஸ்ரீ பி. டி. ராஜன் இலக்கிய மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார்.

ஒவ்வொரு பகுதியிலும் சிறந்த அறிஞர்கள் சொற்பொழிவு ஆற்றப் போகிறார்கள்.

தமிழர்களின் புராதன பண்பாட்டையும் கலைத் திறனையும் கண்முன் நிறுத்திக் காட்டும்படியான முறையில் திரு வி. எம். நரசிம்மன் அவர்கள் கலைக் கண் காட்சி அமைத்து வருகிறார்.

கலைக் கண் காட்சியை 22ல் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் டாக்டர் சுப்பராயன் திறந்து வைக்கிறார்.

தமிழ் விழாவில் இசை, நாட்டியம், நாடகம் இவையும் இடம் பெற்றிருக்கின்றன.

* * *

முந்தைய நாலு ஆண்டு விழாக்களைக் காட்டிலும் சென்னைமா நகரில் நடக்கும் ஐந்தாவது தமிழ் விழா மிகச் சிறப்பாக அமைய வேண்டியது அவசியமாகும்.

சென்னை நகரிலுள்ள தமிழன்பர்கள் அனைவரும் தங்கள் தமிழன்பைக் காரியத்தில் காட்டுவதற்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம்.

ஆயிரம் பதினாயிரக் கணக்கில் சென்னைத் தமிழன்பர்கள் திரண்டு வந்து தமிழ் விழாவை அமோகமாக நடத்தி வைக்க வேண்டும்.

விழாவைச் சிறப்பாக நடத்துவதற்கு வேண்டிய மற்ற உதவிகளும் செய்ய வேண்டும்.

இலங்கையிலிருந்தும், தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், பம்பாய்-கல்கத்தா முதலிய இடங்களிலிருந்தும் கூட நூற்றுக்கணக்கான தமிழன்பர்கள் தலைநகரில் நடக்கும் இவ்வாண்டு தமிழ் விழாவுக்கு விஜயம் செய்வார்கள்.

சென்னை நகரவாசிகளின் தமிழன்பைக் கண்டு அவர்கள் பிரமித்துப் போக வேண்டும்.

தமிழ் விழாவை நடத்தி வைப்பதற்கு வரவேற்பு சபை ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. "பாரத தேவி" ஆசிரியர் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் வரவேற்பு சபையின் தலைவர். முன்னாள் மேயர் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு, ஸ்ரீ பி. எஸ். கைலாசம், டாக்டர் திரிபுரசுந்தரி ("லக்ஷ்மி") ஆகியவர்கள் காரியதரிசிகள். ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார் பொக்கிஷதார். (விலாசம்:—'எவர் கிரீன்', தியாகராஜா ரோடு, தியாகராஜ நகர், சென்னை.)

தமிழ் விழாவின் வரவேற்பு சபையில் எத்தனை அங்கத்தினர் சேர்கிறார்களோ, அதைக் கொண்டு தான் சென்னை நகரவாசிகளின் தமிழன்பு மதிப்பிடப் படும்.

பலரும் வரவேற்பு சபையில் சேருதல் சாத்தியமாகும் பொருட்டே, அங்கத்தினர் சந்தா ரூபாய் பத்து என்று வைத்திருக்கிறார்கள்.

தமிழ் விழாவைச் சிறப்பாக நடத்துவதற்குப் பத்து ரூபாய் சந்தா கொடுத்து வரவேற்பு சபையில் சென்னை நகரவாசிகள் ஆயிரம் பேராவது சேராவிட்டால், சென்னை நகரத்தின் தமிழன்பைக் குறித்து நாம் எப்படிப் பெருமை கொள்ள முடியும்!

தமிழன்னையின் முடிசூட்டு விழாவுக்குப் பத்து ரூபாய் காணிக்கை செலுத்தக் கூடியவர்கள் அனைவரும் உடனே வரவேற்பு சபைத் தலைவர், காரியதரிசிகள் அல்லது பொக்கிஷதாருக்குப் பணத்தை அனுப்பி அங்கத்தினர்களாக வேண்டும்.

மற்றவர்கள் எல்லாரும் விழா நடக்கும் மூன்று தினங்களிலும் தேனாம்பேட்டை மைதானத்துக்குத் திரண்டு வந்து தமிழ் விழாவைக் குதூகலமாக நடத்திக் கொடுக்க வேண்டுகிறோம்.

## சுதந்திரத் திருநாள்

டில்லிமா நகரத்தின் செங்கோட்டை மீது பறந்த பிரிட்டிஷ் யூனியன் ஜாக் கொடியை இறக்கி, இந்தியாவின் சுதந்திரக் கொடியை உயர்த்தி, ஐந்து ஆண்டுகள் ஆகின்றன. 1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15ல் அந்த அற்புத சம்பவம் நிகழ்ந்தது. கடைசி பிரிட்டிஷ் வைஸ்ராய் லார்ட் மௌண்ட் பேட்டன் கையினாலேயே யூனியன் ஜாக் கொடி இறக்கப்பட்டு இந்திய சுதந்திரக் கொடி உயர்த்தப் பட்டது! ஒரு நாட்டை நூற்றைம்பது வருஷங்களுக்கு மேலாக

ஆண்டவர்கள், ஆளப்பட்ட நாட்டுக்கு விடுதலை அளித்து விட்டு மூட்டை முடிச்சுகளுடன் 'கப்பலேறிய அதிசயம் உலக சரித்திரத்தில் அன்று வரையில் நிகழ்ந்ததில்லை.

மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியினாலும் லட்சக்கணக்கான தேச பக்தர்களின் தியாக சக்தியினாலும் அந்த அதிசயம் நிகழ்ந்தது. அதைப் பார்ப்பதற்கு நாம் கொடுத்து வைத்திருந்தோம்.

இந்தியாவில் இன்று வாழும் நாம் அனைவரும் பாக்கியசாலிகள். நம்மில் ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் அடிமை இந்தியாவில் பிறந்தோம். நம் தாய் நாட்டின் அடிமைத் தளைகள் அகற்றப்பட்டதைக் கண் முன்னால் கண்டோம். இன்று சுதந்திர இந்தியாவில் வாழ்கிறோம்.

ஆங்கிலேய ஆதிக்கத்தின் கீழ் அஞ்சி நடுங்கி இந்திய மக்கள் அடிமைகளாக வாழ்ந்த காலத்தையும் பார்த்தோம்.

நாம் வோட்டுக் கொடுத்து அனுப்பிய பிரதிநிதிகள் டில்லியிலும் சென்னையிலும் மற்ற மாகாணத் தலை நகரங்களிலும் இன்று ஆட்சி பீடங்களில் அமர்ந்து அரசாங்கம் நடத்துவதையும் பார்க்கிறோம்.

''இந்தியாவில் வாழும் முப்பது கோடி மக்களையும் முப்பது கோடி புழுக்களாக வெளி நாட்டார் மதிக்கிறார்களே !'' என்று சுவாமி விவேகானந்தர் போன்ற மகான் உள்ளங் குமுறிக் கூறிய காலத்திலும் வாழ்ந்தோம்.

அகில உலகத்தின் முன்னால் இந்தியா சரி நிகர் சமானமாகத் தலை நிமிர்ந்து நிற்கும் காலத்திலும் வாழ்கிறோம். சர்வ தேசியப் பிரச்னைகளில் இந்தியாவின் உதவியை அயல் நாட்டார் ஆவலுடன் எதிர்பார்க்கும் அதிசயத்தைக் காண்கிறோம்.

* * *

காந்தி மகாத்மாவின் தபோ பலத்தினால் மற்ற நாடுகளைக் காட்டிலும் சுலபமாகவே இந்தியா சுதந்திரம் அடைந்து விட்டது.

இதனால், சுதந்திரத்தின் பெருமையை நாம் பூரணமாக உணராது இருந்துவிடும் அபாயம் ஒன்று இருக்கிறது. அதற்கு ஒரு நாளும் இடங் கொடுக்கக் கூடாது.

அற்ப சௌகரியங்களையோ, அசௌகரியங்களையோ முன்னிட்டு நாட்டின் சுதந்திரத்தைப் பற்றிக் குறைவாக எண்ணவும் பேசவும் எழுதவும் கூடாது.

மற்ற எல்லாச் சௌகரியங்களும் இருந்தாலும், சுதந்திரமில்லாத அடிமை நாட்டில் வாழுவோர் மனிதர்கள் அல்லர்.

எத்தனை அசௌகரியங்கள் இருந்தபோதிலும் சுதந்திர நாட்டில் ஜனநாயக அரசியலின் கீழ் வாழுகிறவர்கள்தான் மனிதர்கள்.

''மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்
கைகொட்டிச் சிரியாரோ ?''

என்ற மகா கவி பாரதியாரின் வாக்கை நாம் என்றும் மறவாம லிருப்போமாக.

# உலகத்தில் ஐந்தே ராஜாக்கள்!

இந்த உலகத்திலே இன்னும் சில வருஷங்களில் ஐந்தே ஐந்து ராஜாக்கள்தான் பாக்கியிருக்கப் போகிறார்கள்.

1. இங்கிலாந்து ராஜா அல்லது ராணி. 2. இஸ்பேட் ராஜா. 3. ஆடுதன் ராஜா. 4. க்ளாவர் ராஜா. 5. டைமன் ராஜா.

சமீபத்தில் முடி துறந்த எகிப்து மன்னர் பரூக் சில வருஷங்களுக்கு முன் மேற்கூறிய விதம் ஜோஸ்யம் கூறினாராம். எனவே, தாம் உள்பட உலக நாடுகளில் உள்ள ராஜாக்கள் யாவரும் ஒரு காலத்தில் முடி துறப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதை அவர் அறிந்திருக்க வேண்டும் !

அரபு நாடுகளிடையே துருக்கியில் ஆரம்பித்த மன்னர் முடி துறக்கும் படலம் ஒவ்வொரு நாடாக நிகழ்ந்து வருகிறது.

பல ஆண்டுகளுக்கு முன் துருக்கி சுல்தான் பதவி இழந்தார். பிறகு ஆப்கன் மன்னர் முடி துறந்தார். சில தினங்களுக்கு முன் எகிப்து மன்னர் பரூக் ராஜ்யாதிகாரத்தைத் துறந்து நாட்டை விட்டு வெளியேற நேர்ந்தது. ஈரான் மன்னருக்கும் அதே கதி ஏற்படலாம் என்ற நிலைமை உண்டாகி யிருக்கிறது. சில மாதங்களுக்கு முன் ஸிம்மாசனம் ஏறிய டிரான்ஸ் ஜார்டன் மன்னருக்குச் சித்தசுவாதீனம் இல்லை என்று இப்போது பிரகடனம் செய்திருக்கிறார்கள்.

* * *

ஈரானில் உள்ள பிரிட்டிஷ் எண்ணெய்க் கம்பெனியின் உரிமையில் தலையிட ஈரான் சர்க்காருக்கு அதிகாரம் இல்லை என்று பிரிட்டிஷ் சர்க்கார் சர்வதேசக் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருந்தனர். அந்த வழக்கில் ஈரான் சர்க்கார் சார்பில் ஆஜராகி வாதிப்பதற்காக ஈரான் பிரதம மந்திரி டாக்டர் மூஸாதிக் ஜினிவாவுக்குச் சென்றிருந்தார். இறுதியில் சர்வதேசக் கோர்ட்டார் பிரிட்டிஷ்—ஈரான் தகராறில் தலையிடத் தங்களுக்கு அதிகாரம் இல்லை என்று தீர்ப்புக் கூறி விட்டனர்.

ஏற்கனவே ஈரான் மக்களிடையே மிகுந்த செல்வாக்குடன் விளங்கும் மூஸாதிக்கிற்கு மேற்படி தீர்ப்பு மகத்தான வெற்றியாக அமைந்தது. அவர் ஈரானுக்குத் திரும்பி வந்ததும் அந்த நாட்டின் பிரச்னைகளைத் தீர்க்கத் தமக்குச் சர்வாதிகாரம் வேண்டும் என்று கோரினார். ஆனால் அதற்கு ஈரான் பார்லிமெண்டு இணங்க வில்லை. ஈரான் மன்னர் அகமது கவாம் என்ற கோமகவரைப் பிரதம மந்திரி பதவியில் நியமித்தார்.

அதிலிருந்து ஈரான் நாடெங்கும் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது. ஜனங்கள் கொதித்து எழுந்தனர். மூஸாதிக் மறுபடியும் பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டுள்ளார்.

தீவிரவாதியான டாக்டர் மூஸாதிக் பிரதம மந்திரி பதவியில் இருக்கும் வரையில் ஈரான் எண்ணெய்த் தகராறு விஷயமாக அவருடன் விவாதிக்க முடியாது என்று பிரிட்டிஷார் பிடிவாதம் காட்டி வந்தனர். ஆனால் இன்று ஈரானில் மூஸாதிக் சர்வாதிகாரியாக விளங்குவதால் பிரிட்டிஷார் தங்களுடைய பிடிவாதத்தை விட்டுவிட்டு அவருடன் சமரசப் பேச்சு நடத்தித் தீர வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இல்லாவிடில் ஈரான்—பிரிட்டிஷ் தகராறு தீருவதற்கு வழியில்லை. மேற்படி தகராறு முற்றி விடுமாயின் மற்ற மத்திய கேந்திர நாடுகளுக்கும் தீ பரவி விடலாம்; எண்ணெய்ப் பிரதேசத்தில் தீப் பிடித்தால் உலகத்துக்கே கேடுதான் அல்லவா !

# பொன்னியின் செல்வன்



## கல்கி

### அத்தியாயம் 45

## வானதிக்கு அபாயம்

"அக்கா! ஐந்து வயதில் நான் காவேரி வெள்ளத்தில் மூழ்கியது நினைவிருக்கிறதா? காவேரித் தாய் என்னை எடுத்துக் காப்பாற்றிப் படகிலே விட்டு விட்டு மறைந்தது நினைவிருக்கிறதா?" என்று அருள்வர்மன் கேட்டான்.

"இது என்ன கேள்வி, தம்பி! எப்படி அதை நான் மறந்துவிட முடியும்? 'பொன்னியின் செல்வன்' என்று உன்னை அழைத்து வருவதே அந்தச் சம்பவத்தின் காரணமாகத் தானே?" என்றாள் குந்தவை.

"என்னைக் காப்பாற்றிய காவேரித் தாயை இலங்கையில் நான் கண்டேன், அக்கா!...என்ன, பேசாதிருக்கிறாயே? உனக்கு ஆச்சரியமாயில்லையா?"

"ஆச்சரியமில்லை, தம்பி! ஆனால் ஆர்வம் நிறைய இருக்கிறது. அவளைப் பற்றி எல்லா விவரங்களையும் சொல்!"

"ஒருநாளில், ஒரு தடவையில், சொல்ல முடியாது. முக்கியமானதை மட்டும் சொல்லுகிறேன். காவேரி வெள்ளத்திலிருந்து என்னை அவள் காப்பாற்றியது மட்டுமல்ல; இலங்கையில் பல தடவை என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறாள். உயிரைக் காப்பாற்றியது பெரிதல்ல, அக்கா! எத்தனையோ பேர் தற்செயலாகப் பிறர் உயிரைக் காப்பாற்றுகிறார்கள். அவள் என்னிடத்தில் வைத்துள்ள அன்பு இருக்கிறதே, அதற்கு இந்த ஈரேழு பதினாலு உலகங்களும் இணையாகாது...ஏன்? நீ என்னிடம் வைத்துள்ள அன்பைக்கூட அடுத்தபடியாகத் தான் சொல்ல வேண்டும்!"

"அதைச் சொல்லுவதற்கு நீ தயங்க வேண்டாம். உன்னிடம் என் அன்பு அவ்வளவு ஒன்றும் உயர்ந்தது அல்ல; சுயநலம் கலந்தது. உண்மையைச் சொல்கிறேன், தம்பி! எனக்கு இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மை தான் முதன்மையானது. அதற்கு நீ பயன்படுவாய் என்று தான் உன் பேரில் அன்பு வைத்திருக்கிறேன். அந்த நோக்கத்துக்கு நீ தடையாயிருப்பாய் என்று தெரிந்தால், என் அன்பு வெறுப்பாக மாறினாலும் மாறி விடும். ஆனால் அந்த ஊமைச் செவிட்டு ஸ்திரீயின் அன்பு அத்தகையதல்ல. நம்முடைய தந்தையிடம் இருபது வருஷங்களுக்கு மேலாக அவள் உள்ளத்தில் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்த அத்தனை அன்பையும் உன் பேரிலே சொரிந்திருக்கிறாள். அதற்குப் பதினாலு உலகமும் இணையில்லைதான்!"

"உனக்கு அது எப்படித் தெரிந்தது, அக்கா!"

"எதைச் சொல்கிறாய், தம்பி!"

"அவள் நம்முடைய பெரிய தாயார் என்பது?"

"தந்தை சொன்னதிலிருந்தும் வந்தியத்தேவர் சொன்னதிலிருந்தும் ஊகித்துக் கொண்டேன், தம்பி! அவள் உன்னைத் தன் சொந்த மகன் என்று எண்ணியிருக்கிறாளா? அல்லது சக்களத்தியின் மகன் என்று எண்ணியிருக்கிறாளா?"

"அந்த மாதிரி வேற்றுமையான எண்ணம் என் மனதிலும் உதிக்கவில்லை; அவள் மனதில் எள்ளளவும் இருப்பதாகத் தெரியவில்லை. நீ ஏன் அம்மாதிரி வேற்றுமைப்படுத்திப் பேசுகிறாய்?"

"தம்பி! அந்த ஊமை ஸ்திரீ வீற்றிருக்க வேண்டிய சிங்காதனத்தில் இன்று நம் தாயார் வீற்றிருக்கிறாள். அது தெரிந்திருந்தும் அவள் உன்னிடம் அத்தனை அன்பு வைத்திருந்தால், அது மிக்க விசேஷமல்லவா?"

"நான் அவள் வயிற்றில் பிறந்த மகன் அல்ல என்பது அவளுக்குத் தெரிந்துதானிருக்க வேண்டும். வயது வித்தியாசம் தெரியாமலா போகும்? அவளால் பேச முடியாது; மனதில் உள்ளதைச் சொல்ல முடியாது. ஏதோ சித்திரங்கள் எழுதிக் காட்டியதைக் கொண்டு எவ்வளவு தெரிந்து கொள்ளலாமோ, அவ்வளவு தெரிந்து கொண்டேன். என்னிடம் அவளுடைய அன்பு இருக்கட்டும்; நம் தந்தையிடம் அவள் எத்தகைய அன்பு வைத்திருக்க வேண்டும் என்பதை நினைத்தால் என் நெஞ்சு உடனே உருகி விடுகிறது. அக்கா! என்னுடையபிராயத்தில் அப்பா என்னைப் போல இருப்பாரா?"

"இல்லை, தம்பி, இல்லை! உன்னுடைய பிராயத்தில் நம் தந்தை மன்மதனைத் தோற்கடிக்கும் அழகுடன் விளங்கினார். நம்முடைய சோழ குலம் வீரத்துக்குப் பெயர் போனதே தவிர அழகுக்குப் பெயர் போனதல்ல. நம் பாட்டனார் அரிஞ்சய தேவர் அழகில் நிகரற்ற வைதும்பராயன் குலத்தில் பிறந்த கல்யாணியை மணந்தார். கல்யாணியை அரிஞ்சயர் மணந்தபோது அவள் பத்தரை மாற்றுப் பசும் பொன்னொத்த மேனியும் பூரண சந்திரனை யொத்த முகமும் கொண்ட புவனமோஹினியாக விளங்கினாள். தற்சமயம் இத்தனை வயதான பிறகும் கல்யாணிப் பாட்டி எவ்வளவு அழகாயிருக்கிறாள் என்பதை நீயே பார்த்திருக்கிறாய். அதனால் நமது தந்தையும் அவ்வளவு அழகுடன் இருந்தார்; 'சுந்தரசோழர்' என்ற பட்டப் பெயரும் பெற்றார். நாம் நம்முடைய தாயாரைக் கொண்டு பிறந்திருக்கிறோம். திருக்கோவலூர் மலையமான் வம்சத்தில் பிறந்தவர்கள் அழகை வெறுப்பவர்கள்; அழகு வீரத்துக்குச் சத்துரு என்று நினைப்பவர்கள்......"

"அழகுக்கும் வீரத்துக்கும் என்ன சம்பந்தம் உண்டோ, என்னமோ, எனக்குத் தெரியாது. ஆனால் அழகுக்கும் அன்புக்கும் சம்பந்தமில்லை என்பதை அறிவேன். இல்லாவிடில் ......"

"இல்லாவிடில் இந்தப் பெண் வானதி எதற்காக உன்னைத் தூண் மறைவிலிருந்து கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள்? அதோ அந்தப் படகில் சேந்தன் அமுதன் பூங்குழலியை ஏன் கண்கொட்டாமல் பார்த்துப் பரவசமடைந்து கொண்டிருக்கிறான்?"

இளவரசர் புன்னகை புரிந்து, "அக்கா! நீ எதிலிருந்தோ எதற்கோ போய்விட்டாய்! என் பெரியன்னை என்னிடம் வைத்துள்ள அன்பைக் குறித்துச் சொன்னேன். அது போனால் போகட்டும்; இவ் வுலகில் ஒருவரைப் போல் இன்னொருவர் தத்ரூபமாக இருப்பதென்பது சாத்தியமா, அக்கா?"

"ஏன் சாத்தியமில்லை? இரட்டைப் பிள்ளைகளாயிருந்தால் அது சாத்தியம். அல்லது தாயும் மகளும் ஒரு பிராயத்தில் ஒரேமாதிரி இருப்பது சாத்தியந்தான். இதைத் தவிர பிரம்ம சிருஷ்டியில் ஒருவருக் கொருவர் சம்பந்தமே யில்லாதவர்கள், அபூர்வமாகச் சில சமயம் ஒரே மாதிரி இருப்பதும் உண்டு."

"பழுவூர் இளைய ராணியும் இலங்கையில் நான் பார்த்த நம் பெரியன்னையும் ஒரேமாதிரி இருப்பதாக வந்தியத்தேவர் சொல்வது உண்மையா யிருக்க முடியுமா? நந்தினி சிறு பெண்ணாயிருந்த போதுதான் நான் பார்த்திருக்கிறேன். பழுவூர் இளைய ராணியான பிறகு நன்றாய்ப் பார்த்ததில்லை. உனக்கு என்ன தோன்றுகிறது?"

"நான் பழுவூர் ராணியைப் பார்த்திருக்கிறேனே தவிர, நம் பெரியம்மாவைப் பார்த்ததில்லை. ஆனால் வந்தியத்தேவர் கூறியது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். என் தந்தை கூறிய வரலாற்றிலிருந்து அதைத் தெரிந்து கொண்டேன், தம்பி!"

"தந்தையே கூறினாரா? உன்னிடம்? என்ன கூறினார்? எப்போது கூறினார்?"

"சில நாளைக்கு முன்பு நானும் வானதியும் தஞ்சைக்குப் போயிருந்தோம். அப்போது தம் இளம்பிராயத்தில் நடந்த சம்பவத்தைக் கூறினார். இலங்கைக்கு அருகில் உள்ள ஒரு தீவில் தான் தனியாக ஒதுக்கப்பட்டதையும், அத் தீவில் ஒரு ஊமைப் பெண் தன்னிடம் காட்டிய அன்பைப் பற்றியும் கூறினார். பராந்தகர் அனுப்பிய ஆட்கள் தம்மை அத் தீவில் கண்டு பிடித்து அழைத்து வந்ததைப் பற்றிச் சொன்னார். தனக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய அன்று அரண்மனையில் வாசலில் நின்ற கூட்டத்தில் அவளைப் பார்த்தாராம். அடுத்த கணம் அவள் மறைந்து விட்டாளாம். அவளைத் தேடி அழைத்து வர முதன் மந்திரி

அநிருத்தரையே அனுப்பினாராம். ஆனால் அந்தப் பெண் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து கடலில் குதித்து இறந்து விட்டாள் என்று அநிருத்தர் வந்து கூறினாராம். இந்தச் சம்பவம் நம் தந்தையின் உள்ளத்தில் இருபத்தி நாலு வருஷங்களாக இருந்து அல்லும் பகலும் வேதனை அளித்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்தேன். அவள் இறந்து விட்டதாகவே தந்தை நினைத்துக் கொண்டிருக்கிறார். தம்மால், தமது குற்றத்தால், அவள் மனம் புண்பட்டு உயிரை விட்டு விட்டதாகவும் எண்ணிக் கொண்டிருக்கிறார். தம்பி! சோழ சாம்ராஜ்யத்தைப் பற்றி நம் மனக் கோட்டையெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும். நீயும் நானுமாக முயன்று நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்று இருக்கிறது. நீ எப்படியாவது இலங்கையிலிருந்து அம் மாதரசியைத் தஞ்சைக்கு அழைத்து வர வேண்டும். தந்தையிடம் அவள் இறந்துவிடவில்லை, உயிரோடிருக்கிறாள் என்பதை நேரில் நிரூபித்துக் காட்ட வேண்டும். இல்லாவிட்டால், நம் தந்தைக்கு இந்த ஜன்மத்திலும் மனச்சாந்தி இல்லை, மறு ஜன்மத்திலும் அவருக்கு நிம்மதியிருக்க முடியாது!''

''அக்கா! சமீபத்தில் நான் இரண்டு மூன்று தடவை மரணத்தின் வாசல் வரையில் சென்று திரும்பினேன். அப்போதெல்லாம் என் மனதில் தோன்றிய எண்ணம் என்ன தெரியுமா? பெரியம்மாவைத் தந்தையிடம் அழைத்துப் போய் விடாமல் செத்துப் போகிறோமே என்ற ஏக்கந்தான். அக்கா! அந்த மாதரசியை நினைத்தாலும் என் உள்ளம் குமுறுகிறது. வாயிருந்தால் மனதிலுள்ள குறைகளையும் வேதனைகளையும் வெளியிட்டுச் சொல்லி ஆறுதல் அடையலாம். காது இருந்தால் பிறர் கூறும் ஆறுதல் மொழிகளைக் கேட்டுத் துக்கம் தீரலாம். வாயும் செவியும் இல்லாத ஒருத்தியினுடைய நிலையை எண்ணிப் பார்! உள்ளத்தில் குமுறும் அன்பையும் ஆர்வத்தையும் துன்பத்தையும் வேதனையையும் கோபத்தையும் தாபத்தையும் எல்லாவற்றையும் மனதிற்குள்ளே அடக்கி வைத்திருக்க வேண்டும். அதிலும் நம் பெரியன்னையைப் போல் ஆசாபங்கம் அடைந்தவளின் மனோ நிலையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? அவள் பைத்தியக்காரியைப் போல் இலங்கைத் தீவின் காடுகளில் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதில் வியப்பென்ன? அதையெல்லாம் நினைக்க நினைக்க என் நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது. அவளை எப்படியாவது அழைத்து வந்து தந்தையிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகிறது. ஆனால், நம் தந்தை அதை விரும்புவார் என்று நினைக்கிறாயா, அக்கா?''

''தந்தை விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, நம்முடைய கடமை அது, தம்பி! இறந்து போனவளின் ஆவி வந்து அவரைத் துன்புறுத்துவதாக எண்ணி இரவு நேரங்களில் நம் தந்தை அலறுகிறார். இதனாலேயே அவர் உடம்பும் குணமடையவில்லை.''

''இது எப்படி உனக்குத் தெரிந்தது, அக்கா! இதுவும் தந்தை சொன்னாரா?''

''தந்தையும் சொன்னார்; என் தோழி வானதியும் சொன்னாள்.''

''வானதி சொன்னாளா? அவளுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம், அக்கா! நீ அவளிடம் சொன்னாயா, என்ன?''

''இல்லை, இல்லை! தஞ்சை அரண்மனையில் ஒரு நாள் நிகழ்ந்ததை அவள் வாய் மொழியாகவே சொல்லச் சொல்கிறேன். இருந்தாலும் நீ ரொம்பப் பொல்லாதவன், தம்பி! சோழர் குலத்தின் பண்பாட்டையே மறந்து விட்டாய்! கொடும்பாளூர் இளவரசியிடம் ஒரு வார்த்தை பேசவும் இல்லை; சௌக்கியமாக இருக்கிறாயா என்று கேட்கக்கூட இல்லையே? மகா வீரரான சிறிய வேளாரின் புதல்விக்கு நீ செய்யும் மரியாதை இதுதானா? அழகாயிருக்கிறது!''

''அக்கா! வானதியைக் கவனித்துக் கொள்ள நீ இருக்கும்போது கவலை என்ன? சௌக்கியமா என்று நான் விசாரிப்பதுதான் என்ன?''

''ரொம்ப சரி; சற்று வாயை மூடிக் கொண்டிரு! வானதி! இங்கே வா! உன்னை இளவரசன் நன்றாய்ப் பார்க்க வேண்டுமாம்!'' என்றாள் குந்தவை.

வானதி அருகில் வந்தாள். இளவரசரைப் பார்த்தும் பாராமலும் நின்று கொண்டு, ''அக்கா! எதற்காகக் கற்பனை செய்து கூறுகிறீர்கள்! தங்கள் தம்பி என்னைப் பார்க்க விரும்பவில்லை. அவர் பார்வையெல்லாம் அதோ ஓடையில் இருக்கும் ஓடத்தின் மேலேயே இருக்கிறது. அவசரமாகத் திரும்பிப் போக வேண்டும் போலிருக்கிறது!'' என்று பட்டுப் போன்ற மிருதுவான குரலில் கூறினாள். ஓடத்தில் இருந்த பூங்குழலியை நினைத்துக் கொண்டு, ஓடத்தைக் குறிப்பிட்டாள் போலும்!

இளவரசன் நகைத்துக் கொண்டே, "அக்கா! உன் தோழிக்குப் பேசத் தெரிகிறதே நம் குடும்பத்தைச் சேர்ந்த ஊமைகளுடன் இவளும் ஒரு ஊமையோ என்று பயந்து போனேன்!" என்றான்.

"அக்கா! இவரைப் பார்த்தால் எனக்குப் பேச வருகிறதில்லை. எனக்கே நான் ஊமையாய்ப் போய் விட்டேனோ என்று பயம் உண்டாகிறது!" என்றாள் வானதி.

"அது ரொம்ப நல்லது. கோடிக் கரையில் ஒருவன் இருக்கிறான். பூங்குழலியின் தமையன். அவன் மற்றவர்களிடம் ஒருவாறு தெத்தித் தெத்திப் பேசுகிறான். ஆனால் அவன் மனைவியைக் கண்டால் ஊமையாகி விடுகிறான். அதனால் அவனை அவன் வீட்டார் ஊமை என்றே வைத்து விட்டார்கள்" என்றான் இளவரசன்.

"இந்தக் கொடும்பாளூர்ப் பெண் கொஞ்சம் அந்த மாதிரிதான். முன்னேயெல்லாம் இவளைச் சற்று நேரம் பேசாமல் சும்மா இருக்கச் சொன்னால் இவளால் முடியவே முடியாது. பேச ஆரம்பித்தால் நிறுத்தவே மாட்டாள். நீ முதன் முதலில் இலங்கைக்குப் போனாயே அது முதல் இவளுடைய பேச்சுக் குறைந்து விட்டது. தனியாகத் தனியாகப் போய் உட்கார்ந்து கொண்டு எதையோ எண்ணிக் கொண்டிருக்கிறாள். அது போனால் போகட்டும். வானதி! அன்று இரவு தஞ்சை அரண்மனையில் நடந்ததையெல்லாம் இளவரசனுக்கு விவரமாகச் சொல்லு!" என்றாள் குந்தவை.

"கொடும்பாளூர் இளவரசி உட்கார்ந்து கொண்டு சொல்லட்டும், அக்கா! இவள் இத்தனை நேரம் நிற்பதைப் பார்த்தால் இவளுடைய பெரிய தந்தை உருகிப் போய் விடுவார். தென்திசைச் சேனாதிபதி என்னைப் பார்க்கும்போதெல்லாம் இவளைப் பற்றி விசாரிப்பார். நீயோ இவளைப் பற்றி ஒன்றுமே சொல்லி அனுப்புவதில்லை. ஆகையால், நான் அவருக்குப் பதில் சொல்ல முடியாமல் திண்டாடுவேன்" என்றான் இளவரசன்.

"வாணர் குலத்து வீரரிடம் இவளைப் பற்றி விவரமாய்ச் சொல்லி அனுப்பினேனே, அவர் ஒன்றும் உன்னிடம் சொல்லவில்லையா?"

"அவர் சொல்லித்தான் இருப்பார், அக்கா! இவர் காதில் ஒன்றும் விழுந்திராது. இவருக்கு எத்தனையோ ஞாபகம்!" என்றாள் வானதி.

"அதுவும் உண்மைதான். உன்னுடைய ஓலையைப் பார்த்த பிறகு வேறு ஒன்றிலும் என் மனது செல்லவில்லை. இந்த சுரத்திற்குப் பிறகு என் காது கூடக் கொஞ்சம் மந்தமாயிருக்கிறது. உன் தோழியை உரக்கப் பேசச் சொல்லு!" என்றான் அருள்வர்மன்.

பிறகு, வானதி தஞ்சை அரண்மனையில் குந்தவை துர்க்கை கோயிலுக்குப் போன பிறகு தான் தனியே மேன்மாடத்தில் உலாவச் சென்றதையும், சக்கரவர்த்தியின் அபயக் குரல் கேட்டதையும், அந்த இடத்துக்குத் தான் சென்று கீழே எட்டிப் பார்த்ததையும், அங்கே தான் கண்ட காட்சியையும் கூறினாள். இடையிடையே வானதி இளவரசனின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் மெய் மறந்து நின்று விட்டாள். இளைய பிராட்டி அவளை ஒவ்வொரு தடவையும் தூண்டிப் பேசும்படி செய்வது அவசியமாயிருந்தது.

எல்லாவற்றையும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த இளவரசன், கடைசியாகத் தமக்கையை நோக்கி, "அக்கா! உன் தோழி முக்கியமான ஒரு சம்பவத்தை விட்டு விட்டாள் போலிருக்கிறதே! இவ்வளவையும் பார்த்துக் கேட்டபிறகு இவள் மூர்ச்சை அடைந்து விழுந்திருக்க வேண்டுமே?" என்றான்.

குந்தவை சிரித்தாள்; வானதி நாணத்துடன் தலைகுனிந்து நின்றாள்.

குந்தவை அவளை அன்பு ததும்பிய கண்களினால் பார்த்து, "வானதி! நீ சற்று நேரம் ஓடைக் கரையோடு உலாவி விட்டு வா! இல்லாவிட்டால், நம் பரிவாரங்கள் இருக்குமிடத்துக்குப் போயிரு! அருள்வர்மன் இன்னும் சில நாள் இங்கேயேதான் இருப்பான். மறுபடியும் சந்திக்கலாம்!" என்றாள்.

"ஆகட்டும், அக்கா! உலாவி விட்டு வருகிறேன்!" என்று சொல்லிக்கொண்டு வானதி துள்ளிக் குதித்துச் சென்றாள். திடீரென்று அவ்வளவு குதூகலம் அவளுக்கு எப்படி ஏற்பட்டதோ, தெரியாது.

மலர்ந்த முகத்தோடும் விரிந்த கண்களோடும் அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த அருள்வர்மன், அவள் மறைந்ததும், தமக்கையை நோக்கினான்.

"அக்கா! தந்தையின் புலம்பலின் காரணம் எனக்குத் தெரிகிறது. ஆனால் அவர் கண்ட காட்சியைப் பற்றி உன் கருத்து என்ன? அவர் முன்னால் காணப்பட்ட தோற்றம் என்னவாயிருக்கக் கூடும்? தந்தையின் மனப் பிரமையா? அப்படியானால் உன் தோழிக்கும் அந்தப் பிரமை எப்படி ஏற்பட்டிருக்கும்?"

"தந்தை கண்டதும் பிரமை அல்ல; வானதி கண்டதும் மாயத் தோற்றம் அல்ல. தந்தை முன் நடந்தது நள்ளிரவு நாடகம். அதில் முக்கிய பாத்திரமாக நடித்தவள் பழுவூர் இளைய ராணி நந்தினி. இதை அப்போதே நான் ஊகித்துத் தெரிந்து கொண்டேன். வந்தியத்தேவரும் நீயும் சொன்ன விவரங்களுக்குப் பிறகு அது உறுதியாயிற்று..."

"அந்த நாடகத்திற்குக் காரணம் என்ன? பழுவூர் ராணி எதற்காக அப்படிச் செய்ய வேணும், அக்கா?"

"நந்தினிக்குத் தன் பிறப்பைக் குறித்துச் சந்தேகம் உண்டு. சக்கரவர்த்தி தன்னைப் பார்த்து முன்னொரு தடவை நிலைவிழந்ததை அவள் அறிவாள். அதற்குப் பிறகு அவள் தந்தை முன்னால் வருவதே இல்லை. இப்படி ஒரு நாடகம் நடத்தினால் ஏதாவது உண்மை கண்டறியலாம் என்று செய்திருக்கிறாள்..."

"தெரிந்திருக்குமா, அக்கா?"

"அதை நான் அறியேன். நந்தினியின் உள்ளத்தை அவளைப் படைத்த பிரம்மதேவனாலும் கண்டறிய முடியாது. பழுவேட்டரையர் அவளிடம் படும் பாட்டை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. தம்பி! சற்று முன் அழகைப் பற்றிப் பேசினோம் அல்லவா? பெண்களில் அழகி என்றால், நந்தினி தான் அழகி. நாங்கள் எல்லாரும் அவள் கால் தூசி பெற மாட்டோம். நந்தினி முன்னால் எதிர்ப்பட்ட புருஷர்கள் அவளுக்கு அக்கணமே அடிமையாகி விடுகிறார்கள். பழுவேட்டரையர், மதுராந்தகன், திருமலையப்பன், கந்தமாறன், கடைசியாக, பார்த்திபேந்திரன்! அவளுடைய அழகுக்குப் பயந்து கொண்டு மூதன் மந்திரி அநிருத்தர் அவள் பக்கத்திலேயே போவதில்லை. ஆதித்த கரிகாலன் அதனாலேயே தஞ்சைக்கு வருவதில்லை. தம்பி! நந்தினியின் சௌந்தரியத்துக்கு அஞ்சாமல், அவளிடம் தோற்றுப் போகாமல் மிஞ்சி வந்தவர், ஒரே ஒருவர் தான்!..."

"வாணர் குலத்து வீரரைத்தானே சொல்லுகிறாய்?"

"ஆம்! அவர்தான்! அதனாலேயே அவரைக் காஞ்சிக்கு ஆதித்த கரிகாலனிடம் அனுப்பியிருக்கிறேன்."

"எதற்காக?"

"பழுவூர் ராணி கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு வரும்படி நம் தமையனுக்குச் சொல்லியனுப்பியிருக்கிறாள். அவர்களுடைய சந்திப்பைத் தடுப்பதற்காக அனுப்பியிருக்கிறேன். அப்படிச் சந்தித்தாலும் விபரீதம் எதுவும் நேராமல் பாதுகாப்பதற்கு அனுப்பியிருக்கிறேன். கரிகாலனுக்கு நந்தினி நம் தமக்கை என்று தெரியாது. நந்தினி நம் உறவைக் கண்டு கொண்டாளா என்பதையும் நான் அறியேன்."

"அவள் நம் தமக்கை என்பது நிச்சயந்தானா, அக்கா?"

"அதில் என்ன சந்தேகம்? தம்பி! அதை நான் அறிந்ததிலிருந்து என்னுடைய மனத்தை அடியோடு மாற்றிக் கொண்டு விட்டேன். நாம் குழந்தைகளாயிருந்தபோது நந்தினியை நான் வெறுத்தேன்; அவமதித்தேன். அவள் அழகைக்கண்டு பொறாமைப் பட்டேன். நீயும் கரிகாலனும் அவளோடு பேசவுங் கூடாது என்று திட்டம் செய்தேன். அவள் பாண்டிய நாட்டுக்குப் போன பிறகும் அவளிடம் நான் கொண்டிருந்த அசூயையும் வெறுப்பும் அப்படியே இருந்தன. பழுவூர்க் கிழவரை மணம் செய்து கொண்டு திரும்பி வந்த பிறகு எத்தனையோ தடவை அவளைப் பரிகசித்து அவமானப் படுத்தினேன். அதற்கெல்லாம் பிராயச் சித்தம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன்..."

"எப்படி, அக்கா! என்ன மாதிரி பிராயச் சித்தம்?"

"அடுத்த தடவை அவளைச் சந்திக்கும் போது அவள் காலில் விழுந்து என்னுடைய குற்றங்களை யெல்லாம் மன்னிக்கும்படி கேட்டுக் கொள்வேன். அதற்காக என்ன தண்டனை விதித்தாலும் ஏற்றுக் கொள்வேன்..."

"அதை நான் தடுப்பேன். நீ ஒரு குற்றமும் செய்யவில்லை. நீ யாரிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டிய அவசியமும் இல்லை. இந்த ஈரேழு பதினாலு உலகத்தில் உனக்குத் தண்டனை கொடுக்கக் கூடியவர்கள் யாரும் இல்லை. நீ பழுவூர் இளையராணி நந்தினியைப் பார்த்து அசூயைப்படவில்லை. அவள் தான் உன்னைப் பார்த்துப் பொறாமைப் பட்டாள். அவள் தான் உன்னை வெறுத்தாள்..."

"தம்பி! இலங்கையில் பைத்தியக்காரியைப் போல் திரியும் நம் பெரியம்மாவை நினைத்து நீ நெஞ்சம் குமுறுவதாகச் சொன்னாய். அரண்மனையில் சகல சுக போகங்களுடன் வாழ்ந்திருக்கவேண்டிய நந்தினி எப்படி யெல்லாம் வாழ்க்கையில் கஷ்டப்பட்டாள் என்பதை நினைக்கும் போது என் இதயம் பிளந்து போகும் போலிருக்கிறது. யாரோ, எப்

பொழுதோ செய்த தவறுகளின் காரணமாக, எனக்கு முன் பிறந்த தமக்கை இந்தக் கிழவர் பழுவேட்டரையரை மணக்க நேர்ந்து விட்டது......"

"அக்கா! இதெல்லாம் எப்படி நேர்ந்திருக்கும் என்று உனக்கு ஏதாவது தெரிகிறதா? நம் பெரியம்மா இறந்து விட்டதாகத் தந்தை எண்ணுவதற்குக் காரணம் என்ன? நந்தினி அநாதையைப் போல் எங்கேயோ, யார் வீட்டிலோ வளர்ந்து, இந்த நிலைமைக்கு வருவதற்குக் காரணம் என்ன?......"

"அதைப்பற்றியெல்லாம் நான் இரவும் பகலும் யோசித்து வருகிறேன். ஆனால் இன்னமும் நிச்சயமாய்க் கண்டு பிடிக்க முடியவில்லை. அந்த இரகசியங்களை அறிந்தவர்கள் இப்போது இரண்டு பேர் நமக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். நம்முடைய பாட்டி செம்பியன் மாதேவிக்கு ஏதோ விஷயம் தெரிந்திருக்கிறது. முதன் மந்திரி அநிருத்தருக்கு எல்லா விஷயமும் தெரிந்திருக்கும் எனத் தோன்றுகிறது. ஆனால் அவர்கள் இரண்டு பேரிடமிருந்தும் நாம் எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. அநிருத்தருடைய சீடன் ஆழ்வார்க்கடியானுக்கும் ஓரளவேனும் தெரிந்திருக்க வேண்டும். அவன் குருவை மிஞ்சியவன்; வாயைத் திறக்க மாட்டான். தம்பி! அதையெல்லாம் கண்டு பிடிப்பதற்கு இப்போது அவசரமும் இல்லை. நந்தினியினால் நம் குலத்துக்கு விபரீதமான அபாயமும் அபகீர்த்தியும் ஏற்படாமல் தடுப்பதுதான் இப்போது முக்கியம். வந்தியத்தேவர் சொன்னார்: பழுவூர் ராணி, மீன் சின்னம் பொறித்த மின்னலைப்போல் ஒளிரும் வாள் ஒன்றை வைத்துப் பூஜை செய்து கொண்டிருக்கிறாள் என்று. அதைக் கேட்டதிலிருந்து என் நெஞ்சு பதைத்துக் கொண்டேயிருக்கிறது. தான் பிறந்த குலம் சோழ குலம் என்பதை அறியாமல் பழுவூர் ராணி ஏதாவது செய்துவிடப் போகிறாளே என்று கவலையாயிருக்கிறது."

"பழுவூர் ராணியிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டால், என்ன?"

"சொன்னாலும் என்ன பயன் ஏற்படுமோ, தெரியாது. நம்மிடமெல்லாம் அவளுடைய கோபம் அதிகமானாலும் ஆகும். ஆனால் நமது கடமையை நாம் செய்துவிட வேண்டியதுதான்!"

"அதற்காக வந்தியத்தேவரை நீ அனுப்பியிருப்பது சரிதான். ஆனால் தந்தையிடமும் தெரிவிக்க வேண்டாமா?

அவர் எதற்காக உடல் வேதனை போதாதென்று மனவேதனையும் பட்டுக் கொண்டிருக்க வேண்டும்? நாம் உடனே தஞ்சைக்குப் புறப்படலாம் அல்லவா?''

''கூடவே கூடாது, தம்பி! இரண்டு நாளில் தஞ்சைக்கு நான் புறப்படுகிறேன். ஆனால் இந்தச் சூடாமணி விஹாரத்தில் நான் நீ இன்னும் சில காலம் இருக்க வேண்டும்.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்? தந்தையின் கட்டளையை மீறி என்னை இங்கே இன்னமும் ஒளிந்து மறைந்து வாழச் சொல்கிறாயா?''

''ஆம்; நீ இப்போது தஞ்சைக்கு வந்தால் நாடெங்கும் ஒரே குழப்பமாகி விடும். மக்கள் மதுராந்தகர் மீதும் பழுவேட்டரையர்கள் மீதும் ஒரே கோபமாயிருக்கிறார்கள். உன்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரச் சொன்னதற்காகச் சக்கரவர்த்தி மீது கூட ஜனங்கள் கோபமாயிருக்கிறார்கள். உன்னை இப்போது கண்டால், மக்களின் உணர்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருகும். அதன் விளைவுகள் என்ன ஆகுமோ தெரியாது. உடனே உனக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று ஜனங்கள் கூச்சல் போட்டாலும் போடுவார்கள். தஞ்சைக் கோட்டையையும் அரண்மனையையும் முற்றுகை போடுவார்கள். ஏற்கெனவே மனம் புண்பட்டிருக்கும் தந்தையின் உள்ளம் மேலும் புண்ணாகும். தம்பி! இராஜ்யத்துக்கு ஆபத்து வந்திருக்கிறது என்று உன்னை நான் வரச் சொல்லி ஓலை எழுதினேன். அதே காரணத்துக்காக இப்போது நீ திரும்பி இலங்கைக்குப் போய்விட்டால் நல்லது என்று நினைக்கிறேன்......''

''அக்கா! அது ஒருநாளும் இயலாத காரியம். நம் தந்தையைப் பார்க்காமல் நான் திரும்பிப் போக மாட்டேன். தஞ்சைக்கு நான் இரகசியமாக வருவது நல்லது என்று நினைத்தால் அப்படியே செய்கிறேன். ஆனால் சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். அவரிடம் என்னைக் காப்பாற்றிய காவேரி அம்மன் யார் என்பதைச் சொல்ல வேண்டும்.''

''அதையெல்லாம் நானே சமயம் பார்த்துச் சொல்லி விடுகிறேன். நீ வந்துதான் தீர வேண்டுமா?''

''நேரில் பார்த்த நானே சொன்னால், தந்தைக்குப் பூரண நம்பிக்கை ஏற்படும்; என் மனமும் ஆறுதல் அடையும். பெரியம்மாவை அழைத்துக் கொண்டு வருவதற்கு அவருடைய அநுமதியையும் பெற்றுக் கொள்வேன்......''

''அருள்வர்மா! உன் இஷ்டத்துக்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் இன்னும் ஒரு வார காலம் சூடாமணி விஹாரத்தில் இரு. நான் முன்னதாகத் தஞ்சைக்குப் போகிறேன். நீ வந்திருப்பதைத் தந்தையிடம் அறிவித்து விட்டுச் செய்தி அனுப்புகிறேன். தம்பி! நான் இங்கே உன்னைத் தேடி வந்தது உன்னைப் பார்ப்பதற்காக மட்டுமல்ல; உன்னிடம் ஒரு வரம் கோரிப் பெறுவதற்காக வந்தேன். அதை நிறைவேற்றி வைத்து விட்டால், பின்னர் உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டேன். அபாயத்துக்குப் பயந்து ஒளிந்திருக்கும்படியும் சொல்ல மாட்டேன். ஆண் பிள்ளைகள் அபாயத்துக்கு உட்பட வேண்டியவர்கள்தான். வீர சௌரிய பராக்கிரமங்களில் இணையில்லாதவன் என நீ புகழ்பெற வேண்டும் என்பதுதான் என் ஆசை. ஆனால் மறுபடி நீ உன்னை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளுவதற்கு முன்னால் என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்......''

''இவ்வளவு பெரிய பீடிகை எதற்கு, அக்கா! நீ சொல்லுவதை என்றைக்காவது நான் மறுத்தது உண்டா?''

''மறுத்ததில்லை; அந்த நம்பிக்கையோடுதான் இப்போதும் கேட்கிறேன். ஆதித்த கரிகாலன் கலியாணம் செய்து கொள்ளவில்லை; கலியாணம் செய்து கொள்வான் என்றும் தோன்றவில்லை. சுந்தர சோழரின் குலம் உன்னாலேதான் விளங்க வேண்டும். என் விருப்பத்தை இந்த ஒரு விஷயத்தில் நீ நிறைவேற்றி வைக்க வேண்டும்......''

''உன் விருப்பத்தை நிறைவேற்ற நான் சம்மதித்தால், எனக்குப் பிரியமான பெண்ணை மணந்து கொள்ள நீ சம்மதம் கொடுப்பாய் அல்லவா?''

''இது என்ன இப்படிக் கேட்கிறாய்? இருபது ஆண்டுகளாக நம் விருப்பங்கள் மாறுபட்டதில்லை. இதிலே மட்டும் தனியாக எதற்குச் சம்மதம் கேட்கிறாய்?''

''அக்கா! அதற்குக் காரணம் இருக்கிறது. நான் மணந்து கொள்ளும் பெண் நான் காணும் பகற் கனவுகளை நிறைவேற்றுவதற்கு ஒத்தாசையாயிருக்க வேண்டும் அல்லவா?''

''தம்பி! உன் பகற் கனவுகளை ஒரு பெண்ணின் ஒத்தாசை கொண்டு நிறைவேற்றிக் கொள்ளவா ஆசைப்படுகிறாய்?'' என்றாள் குந்தவை.

அச் சமயத்தில், ''ஐயோ! ஐயோ! அக்கா! அக்கா!'' என்ற அபயக் குரல் கேட்டது. குரல் வானதியின் குரல்தான்.

# பிறவிப்பயன் பெற்றவர்

[ரா. கி.]

விசாலமான நெற்றியில் புனிதமான திருமண் இலங்க நம் அட்டைப்படத்தில் இவ்வாரம் காட்சி தருகிற ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களை எனக்குப் பல காலமாகத் தெரியும். ஆனால் அவரிடம் அதிகமாக நெருங்குவதில்லை. அப்படி நெருங்கினாலும் சட்டைப் பையில் பணம் கொஞ்சமும் வைத்துக் கொள்வதில்லை. பணம் வைத்துக் கொண்டு அவரை நெருங்கினால், ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்காக அது அவரிடம் போய் விடும் என்பது நிச்சயம். ஆகையால் ஜாக்கிரதையாகத் தூரத்திலிருந்தே கும்பிடு போட்டு விட்டுப் போய் விடுவேன்.

இந்த வழக்கத்துக்கு மாறாக, நாலு வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் ஏதோ ஒரு முக்கியமான விழா வைபவத்தின்போது ஸ்ரீ ராமானுஜாச்சாரியாரின் அருகில் உட்காரும்படி நேரிட்டு விட்டது. நான் அப்போது மிகவும் உற்சாகமாக இருந்த சமயம். ஏனெனில், ராஜாஜி சிறிது காலத்துக்கு முன்புதான் கவர்னர் ஜெனரல் ஆகி யிருந்தார். எனக்குப் பெருமை பிய்த்துக்கொண்டு போயிற்று. ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களிடம் நானே வலியப் பேச்சுக் கொடுத்தேன். ''நம் ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆகி யிருக்கிறாரே! தெரியும் அல்லவா!'' என்றேன். ''எல்லாம் தெரியும்; அதனால் என்ன பயன்!'' என்ற பதிலைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போனேன்.

''அது என்ன அப்படிச் சொன்னீர்கள்! நம் தமிழ் நாட்டவர் ஒருவர் கவர்னர் ஜெனரல் பதவிக்கு வந்தால், அது நமக்குப் பெருமை இல்லையா!'' என்றேன்.

''பெருமையாவது! மண்ணாங் கட்டியாவது! இராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்கு இன்னும் அவர் நன்கொடை அனுப்பவில்லையே! என்னத்திற்காகப் பெருமைப்படுவது!'' என்றார் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார்.

''ராஜாஜியிடமா நன்கொடை எதிர்பார்க்கிறீர்கள்!'' என்றேன்.

''எதிர்பார்ப்பதில் என்ன தவறு! அவர்தான் இப்போது நிறையச் சம்பளம் வாங்குகிறாரே!''

''ஐயா! ஆயிரம் பதினாயிரக்கணக்கில் வக்கீல் தொழில் செய்து சம்பாதிக்கக் கூடியவர் தேசத்துக்காக அத்தொழிலை விட்டு இருபத்தைந்து வருஷங்கள் வருமானம் ஒன்றுமே இல்லாமல் இருந்தாரே! இப்போது சில மாதங்களாகத் தானே சம்பளம் வாங்குகிறார்!''

''வருமானம் இல்லாதிருந்தபோது அவரை யார் கேட்டார்கள்! இப்போது சம்பளம் வாங்குகிற போது கொடுக்கிறதுதானே! சொந்தமாய்க் கொடுக்காவிட்டாலும் கவர்னர் ஜெனரல் தர்மம் கொடுப்பதற்கென்று ஏற்பட்ட நிதி யிருக்கிறதே, அதிலிருந்து கொடுப்பதுதானே! அப்படிக் கொடுத்தால்தான் ராஜாஜி கவர்னர் ஜெனரல் ஆனதுபற்றி நான் பெருமையடைவேன்! இல்லாவிட்டால் மாட்டேன்'' என்றார்.

சில தினங்களுக்குப் பிறகு மறுபடியும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களைச் சந்தித்தபோது, ''எப்படியும் உங்கள் ராஜாஜி பெரிய மனுஷர் தான். இராமகிருஷ்ண ஹோமுக்கு இரண்டாயிரம் ரூபாய் அனுப்பி யிருக்கிறார்!'' என்றார்.

நான் மானஸீகமாக ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களை மூன்று தடவை பிரதட்சணம் செய்து நமஸ்கரித்து, ''தங்களையே குருநாதனாகக் கொண்டேன். ஏகலைவனைப்போல் தங்களிடம் பொதுக் காரியங்களுக்குப் பணம் வசூலிக்கும் வித்தையைத் தூர இருந்து கற்றுக் கொள்வேன். என்றைக்காவது ஒரு நாள் தங்களிடமே ஒரு பத்து ரூபாயாவது வசூலித்து விட்டேனானால், அன்றைக்குத்தான் வித்தை பூரணமானதாகக் கருதுவேன்'' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டேன்.

* * *

''ஒன்றே செய்யவும் வேண்டும்; ஒன்றும் நன்றே செய்யவும் வேண்டும்'' என்று கபிலர் அகவல் கூறுகிறது. உத்தமமான ஒரு கைங்கரியத்தை வாழ்க்கை இலட்சியமாக எடுத்துக் கொண்டு, அதற்கே தம் வாணாளை முழுக்க முழுக்க அர்ப்பணம் செய்தவருக்கு உதாரணம் வேண்டுமானால் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களைப் பார்த்துக் கொள்ளலாம்.

சுவாமி விவேகானந்தரால் ஆரம்பித்து வைக்கப் பட்ட ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் என்னும் சமய-சமூக ஊழியச் சங்கத்தார் சென்னையில் நெடுங் காலமாகச் சிறந்த கல்வித் தொண்டு செய்து வருகிறார்கள். அந்தத் தொண்டிற்கு ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் தமது அறிவாற்றலையும், ஆயுட் காலத்தையும் அர்ப்பணம் செய்யத் தீர்மானித்தார். பின்னர், அப்பால் இப்பால் திரும்பிப் பார்க்கவில்லை. முக்கியமாக ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லம் என்னும் அநாதைப் பிள்ளைகளின் விடுதிக்குத் தம்மைச் சமர்ப்பித்து அந்த ஸ்தாபனத்தை இந்தியாவிலேயே ஓர் இலட்சிய ஸ்தாபனமாக நடத்தி வருகிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண ஹோம் என்று வழங்கப்படும் இந்த விடுதியை 1905-ம் வருஷத்தில் ஏழு மாணவர்களுடன் ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸரின் நேர் சீடர்களில் ஒருவரான சுவாமி ராமகிருஷ்ணானந்தர் ஆரம்பித்து வைத்தார். அன்று முதல் இல்லம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்திருக்கிறது. பண்டித மாளவியா, மகாத்மா காந்தி முதலிய பெரியார்கள் இல்லத்துக்கு விஜயம் செய்திருக்கிறார்கள். அன்று முதல், இன்று வரையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சந்நியாசிகள் தான் இல்லத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறார்கள்.

ஆனால் இல்லம் நடைபெறுவதற்கு வேண்டிய பணம் வசூலிக்கும் பொறுப்பு மட்டும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்களுடையது. ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாக அவர் மேற்படி ஸ்தாபனத்தின் காரியதரிசி பதவி வகித்து வருகிறார்.

அந்தப் பொறுப்பை அவர் திறம்பட வகிப்பதினாலேயே ஏழு அநாதைச் சிறுவர்களுடன் ஆரம்பமான இல்லத்தில் இன்று 280 மாணவர்கள் தங்கி வருகிறார்கள். முதல் வருஷமாகிய 1905-ம் ஆண்டில் வரவு ரூபாய் 429; செலவு ரூபாய் 390. சென்ற 1951-ம் ஆண்டில் வரவு ரூபாய் 1,19,000; செலவு ரூபாய் 1,69,751.

இல்லம் ஆரம்பமானதிலிருந்து இன்று வரை 47 ஆண்டுகளில் மொத்தம் ரூ. 33,82,546 வசூலித்துச் செலவிடப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரம்மாண்டமான தொகையில், மிகப் பெரும் பகுதியை வசூலித்தவர் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் அவர்கள்தான். நிரந்தர நிதியில் சேரக் கூடிய பெரிய நன்கொடைகளையும் அவர் வசூலிக்கிறார்; வருஷாந்திர செலவுக்காகத் தவணை நன்கொடைகளையும் வசூலிக்கிறார்!

இவ்வளவும் போதாமல், துண்டு விழுவதை ஈடு செய்ய நாடகம் நடத்திப் பணம் சேர்க்கிறார்!

* * *

ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் சென்னை சர்க்கார் காரியாலயத்தில் (ஸெக்ரடேரியட்டில்) பெரிய உத்தியோகத்தில் இருந்தார். அச்சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லத்துக்குப் பணம் சம்பாதிப்பதற்காகவே ஒரு நாடக சபையை ஏற்படுத்தினார். அச்சபையில் நடிகர்கள் பெரும்பாலும் ஸெக்ரடேரியட் உத்தியோகஸ்தர்கள். ஆகையால் 'ஸெக்ரடேரியட் பார்ட்டி' என்று அந்த நாடக சபைக்குப் பெயர் ஏற்பட்டது.

1917-ம் வருஷத்தில் மேற்படி நாடக சபை ஆரம்பமானது முதல் 1945-ம் வருஷம் வரையில் மொத்தம் 227 நாடகங்கள் அவர்கள் நடத்தினார்கள். வசூலான தொகை அவ்வளவையும் ஸ்ரீ ராமகிருஷ்ண இல்லத்துக்கே கொடுத்தார்கள். அதை ஒரு நிரந்தர நிதியாக ஏற்படுத்தி விட்டபடியால், இன்று அதிலிருந்து நிரந்தர வட்டி வருமானம் வந்து கொண்டிருக்கிறது. (1951-ல் ரூ. 15,805-8-0 வட்டி மூலம் கிடைத்தது.) வட்டி உள்பட இதுவரை நிதியில் சேர்ந்துள்ள தொகை ரூ. 5,46,255.

ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் உத்தியோகத்திலிருந்து விலகிய பிறகு, பொதுத் தொண்டிலும் நாடகக் கலையிலும் ஆர்வம் கொண்ட சில இளைஞர்கள் ஒன்று சேர்ந்து ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களின் தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் என்ற பெயருடன் ஒரு நாடக சபையை அமைத்தார்கள். அச்சபையார் இது வரையில் ஐம்பத்தொரு நாடகங்கள் நடத்தி இல்லத்துக்கு ரூ. 1,40,000 அளித்திருக்கிறார்கள்.

கிருபா அமெச்சூர்ஸ் நாடகங்களுக்கு டிக்கட் வாங்குகிறவர்கள் ஏதோ நல்ல காரியத்துக்குப் பணம் கொடுக்கிறோம் என்று எண்ணி மட்டும் வாங்குவதில்லை. "சிறந்த நாடகம் பார்க்கலாம்" என்ற ஆர்வத்துடனேயே வாங்குகிறார்கள்.

தமிழ் நாட்டில் தற்போதுள்ள அமெச்சூர் நாடக சபைகளில் ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் தலை சிறந்து விளங்குகிறது.

ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் நாடகக் கலையில் மிகத் தேர்ந்தவர். தாமே வேடம் பூண்டு அபாரமாக நடித்துக் கொண்டிருந்தார். இப்போது நடிப்பதில்லை. ஆனால் அவருடைய பொதுத் தொண்டின் ஆர்வத்தையும் நாடகக் கலைத் திறனையும் பிதிரார்ஜிதமாகப் பெற்றிருக்கும் டாக்டர் ராகவாச்சாரியார் (ராயபுரம் ஆஸ்பத்திரித் தலைவர்), ஸ்ரீ வரதராஜன் ஆகிய அவருடைய இரு புதல்வர்களும் கிருபா அமெச்சூர்ஸ் நாடக சபையில் முக்கிய நடிகர்கள் ஆவர்.

* * *

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஸ்தாபனத்தின் கல்வித் தொண்டு பலவகைப்பட்டது. அவற்றில் மாணவர் இல்லம் மிக முக்கியமானது. இதில் தாய் தந்தையற்ற ஏழை அநாதைப் பிள்ளைகளே பெரும்பாலும் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். ஆனால் இவர்கள் படிப்பில் சூடிகையான புத்திசாலிப் பிள்ளைகளா யிருக்க வேண்டும். சென்னையில் யுத்த பீதி ஏற்பட்ட சமயத்தில் மாணவர் இல்லத்தின் ஹைஸ்கூல் பகுதி செங்கற்பட்டு ஜில்லா கிராமம் ஒன்றுக்கு மாற்றப்பட்டது; தற்போது ஆத்தூர் என்னும் கிராமத்தில் நடந்து வருகிறது. மாணவர் இல்லத்தைச் சேர்ந்த மோட்டார் இயந்திர நுட்ப சாஸ்திரக் கலாசாலை மட்டும் சென்னையில் நடைபெறுகிறது.

மயிலாப்பூரில் சில பிரமுகர்கள் "விவேகானந்த கலாசாலை" என்ற பெயருடன் புதிய கலாசாலை ஒன்று ஆரம்பித்து, அதை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் நிர்வாகத்தில் நடத்துவதென்று முன் வந்த போது, ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் இல்லக் கட்டிடத்தை மேற்படி கலாசாலைக்கு அளிப்பதென்று தீர்மானிக்கப் பட்டது.

"விவேகானந்தா கலாசாலை" தோன்றும்போதே புகழுடன் தோன்றியது. 1945-ல் 322 மாணவர்களுடன் ஆரம்பிக்கப்பட்டது. இன்று 1259 மாணவர்கள் படிக்கிறார்கள். மேலும் மாணவர்கள் சேருவதற்கு ஆர்வத்துடன் வருகிறார்கள். இடமின்மையால் சேர்த்துக்கொள்ள முடியாமல் நிர்வாகிகள் திணறுகிறார்கள்.

இந்தக் கலாசாலை ஸ்தாபனத்துக்கு யுனிவர்ஸிடி நிபந்தனைப்படி எடுத்த எடுப்பில் ரூ. 5 லட்சம் தேவையா யிருந்தது. அதற்கும் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியாரின் 'ஆய் வந்த' கையையே நம்பி, அவரையே பொக்கிஷதாரராக நியமித்தார்கள். இரண்டு வாரத்தில் ஐந்து லட்சம் வசூலாகி விட்டது! கலாசாலை ஆரம்பமான பிறகு மேலும் ஐந்து லட்சம் ரூபாய் வசூலித்து லெபரேட்டரி கட்டிடம் முதலியவை கட்டி யிருக்கிறார்கள்.

"இந்த மகத்தான சாதனைக்குக் காரண புருஷர் அட்வகேட் ஸ்ரீ எம். சுப்பராயர்தான்" என்கிறார் ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார்.

"இல்லவே இல்லை; ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் தான்" என்கிறார் ஸ்ரீ எம். சுப்பராயர்.

இருவரும் ஒருவருடைய படத்தை இன்னொருவருடைய அறையில் மாட்டி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நன்கொடை வசூலிக்கப் புறப்படும் போது ஒருவர் படத்தை ஒருவர் பார்த்து மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு புறப்படுவார்கள் போலும்!

* * *

ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் அவர்களுக்கு இப்போது 77 பிராயம் ஆகிறது. ஆகவே இளமைப் பிராயந்தான். உடல் சிறிது தளர்ச்சியுற்றாலும், உள்ளத்தின் வலிவு அபாரமா யிருக்கிறது.

ஸ்ரீ சி. ராமானுஜாச்சாரியார் பரம பாகவதர். கர்நாடக சங்கீதத்தில் அபாரமான அபிமானமும் தேர்ச்சியும் உள்ளவர். பிரபல வித்வான்களுக்குத் தெரியாத அபூர்வ தியாகராஜ கீர்த்தனங்கள் சிலவற்றை அவர் அறிவார். சம்பிரதாய முறை வழுவாமல் பக்தி பரவசராக மெய்மறந்து ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனங்களைப் பாடுவார்.

ஸ்ரீ இராமானுஜாச்சாரியார் நீடூழி காலம் இப்புவியில் வாழ்ந்து நூற்றுக்கணக்கான அநாதைப் பிள்ளைகளுக்குத் தாயும் தந்தையுமா யிருந்து காப்பாற்றிக் கல்வித் தொண்டு புரிய அருளுமாறு ஸ்ரீ ராமபிரானைப் பிரார்த்திக்கிறேன்.

அவர் நடத்தி வரும் அரும் பெரும் கல்விப் பணிக்குப் பணம் படைத்தவர்களும் பெரிய மனம் படைத்தவர்களும் பூரண உதவி செய்ய வேண்டும் என்றும் வேண்டிக் கொள்கிறேன்.

விஜயாவின்

# கல்யாணம் பண்ணிப்பார்

டைரக்ஷன்
ப்ரசாத்








மதராஸ்
**காஸினோ & பிராட்வே**
மற்றும் தமிழ்நாடெங்கும்



தயாரிப்பு... **நாகிரெட்டி & சக்ரபாணி**

மண்ணெண்ணெய் டப்பா இந்திய கிராம வாழ்க்கையின் ஒரு பகுதி. லக்ஷக்கணக்கான கிராமவாசிகள் தங்களுடைய சௌகரியத்திற்கு மண்ணெண்ணெயை எதிர்பார்க்கிறார்கள். அது வீட்டிற்கு வெளிச்சம் கொடுக்கவும், சமையல் வேலை செய்வதற்கு எரிகரும்பாகவும், உபயோகப்படுகிறது.

எந்த ஜனங்களுக்கு மண்ணெண்ணெய் அத்யாவசியமோ அவர்களுக்கு அது கிடைக்கும்படி செய்வது பர்மா-ஷெல்லின் நித்தியப்படி வேலையில் ஒன்று. சில சமயங்களில் அது கிராமங்களுக்கு ரெயில் வாகனங்களிலும், மோட்டார் லாரிகளிலும் போய்ச் சேருகிறது. சிலசமயங்களில் மாட்டு வண்டிகளிலும். இன்னும் அதிகதூரத்திலுள்ள இடங்களுக்கு கோவேறு கழுதைமூலம் போய்ச்சேருகிறது. இந்தியாவின் கடலோர பிரதேசங்களில் உள்ளவர்களில் பெரும்பாலோர் தங்களுக்குத் தேவையான எண்ணெயை சிறு படகுகள் மூலம் தருவித்துக் கொள்ளுகிறார்கள்.

பர்மா-ஷெல் கம்பெனியார் இந்தியா முழுவதும் எப்படி அவர்களின் எண்ணெய்களை வினியோகிக்கிறார்கள் என்பதையோ அல்லது பர்மா-ஷெல் ஸ்தாபனத்திற்கு 793 டிப்போக்கள், 375 லாரிகள், 16000 ஆட்கள் அவர்களின் பொருள்களை வினியோகம் செய்ய இருக்கிறார்கள் என்பதையோ கிராமவாசிகள் அறிய மாட்டார்கள். ஆனால் அவர்களுக்கு மண்ணெண்ணெயின் குறிகளான ''உதய சூரியன்'' (''Rising Sun'') ''சக்கர்'' (''Chukker'') ''ஆந்தை'' (''Owl'') ''ராணி'' (''Victoria'') இவைகள் நன்றாகத் தெரியும். ஏனெனில் மண்ணெண்ணெய்தான் அவர்களுடைய உள்ளூர் பவர் ஸ்டேஷன்.

# இந்தியாவின் வாழ்க்கை கிராமத்தில்தான்



**பர்மா-ஷெல்.. பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

**BURMAH-SHELL... IN INDIA'S LIFE AND PART OF IT**



# துணைக்கு வந்தவன்...

மீரா

'மினுக்கு மினுக்கு' என்று எரிந்து கொண்டிருந்த லாந்தரின் அருகில் வண்டியின் வருகைக்காக நின்று கொண்டிருந்தான் ராகவன். கையில் பிடித்திருந்த தோல் பெட்டியைப் பிளாட்பாரத்தில் வைத்து விட்டு, சட்டைக்கு மேல் போட்டிருந்த 'ஸ்வெட்டரை' நன்றாக இழுத்து விட்டுக் கொண்டான். மூக்குக் கண்ணாடியை ஒரு தடவை அந்த இடத்திலிருந்து எடுத்து, பிறகு மாட்டிக் கொண்டு ஸ்டேஷனுக்கு எதிரே நிறைந்திருந்த இருளை நோக்கினான்.

அந்த ஊரில் அவன் போடவேண்டியிருந்த ஐந்து நாள் 'காம்ப்' ஒரு மாதிரியாக அன்றைய சாயங்காலத்துடன் முடிந்து விட்டது. மறு நாள் முழுவதும் அவன் இளைப்பாற வேண்டிய நாள். அன்போடு ருசியாக அவன் அம்மா சமைத்ததைச் சாப்பிட்டு விட்டு 'அப்பாடா' என்று ஒரு நீண்ட உறக்கம் போடலாம் அவன். பிறகு மறுபடியும் கோயமுத்தூருக்குப் பயணம்......

ராகவனுக்கு அந்த வாழ்க்கை ஏதோ ஒரு இயந்திர விதியாகி விட்டது. அந்த வாழ்க்கைதான் அவனை ஆட்கொண்டு விட்டதா, அல்லது அவன்தான் அந்த வாழ்க்கையை ஆட்கொண்டு விட்டானா என்று அவனே தர்க்க ரீதியாக மனத்துடன் போராடிய நாட்கள் அநேகம்.

இருளிலிருந்து முகத்தை எடுத்து, மேலே ஆகாசத்தை ஒரு நிமிஷம் பார்த்து விட்டு அடுத்த லாந்தர்க் கம்பத்தின் அருகிலிருந்த 'ரயில்வே போர்டைக்' கவனித்தான்.

'திருப்பரங்குன்றம்' என்று அவன் இரண்டு மூன்று முறைகள் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான். அந்தப் போர்டிலிருந்து முகத்தை எடுத்துத் தூரத்தில் 'ஜிகு ஜிகு' வென்று வந்து கொண்டிருந்த ரயில் வண்டியின் 'சர்ச்' விளக்கில் முகத்தைப் பதித்தான் ராகவன்.

இருளடர்ந்திருந்த அவன் வாழ்க்கையில் இப்படி அவனை நோக்கி வந்த விளக்குகள் அநேகம். வேலை கிடைக்காமல் மனம் சோர்ந்திருந்த காலத்தில் 'மினுக்' கென்று சுடர் விளக்காய் வந்து, ஒளி தராமல் அவிந்து போன முறைகள் அநேகம். 'வேலை விஷயம்' ஒரு பக்கம் இருக்கட்டும்; அன்பின் உயர்வைப் பற்றி அவன்தான் வாஸ்தவமாக உணர முடியும் என்று எண்ணி அவன் இறுமாந்திருந்த காலத்திலேகூட, இப்படிப் பிரமாதமான ஜுவாலையுடன் கூடவந்த சந்தர்ப்பங்களை அவன் நழுவ விட்டதையும் அவன் மறக்க முடியுமா?

அன்பென்றால் சாதாரணமான அன்பா அது? அவனுடைய அன்பல்லவா அது!

ரயில் வண்டி பிளாட்பாரத்தில் நுழைந்து விட்டது. பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு ஒரு வண்டியில் ஏறிக் கதவைச் சாத்திக் கொண்டான். வண்டி புறப்பட்டுத் திருப்பரங்குன்றம் ஸ்டேஷனைத் தாண்டிய பிறகு ஒரு பெஞ்சியின் நடுவில் காலியாயிருந்த இடத்தில் அமர்ந்து கீழே பெட்டியை வைத்து விட்டுத் தலை நிமிர்ந்தான் ராகவன்.

அவனுக்கு மனம் 'திக்' என்றது. ஸ்டேஷனில் அவன் யாரைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தானோ, அவள் அங்கே உட்கார்ந்திருந்தாள்! அவன் உடம்பு ஒரு முறை அதிர்ந்தது.

'இது உண்மைதானா?' என்று அவன் தன்னையே பிரமை பிடித்துக் கேட்டுக் கொண்டான். ஆனால் ஆச்சரியத்துடன் அவன் நோக்கிய அந்தப் பெண், ஜன்னலுக்கு வெளியே தன் முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தாள். வண்டி ஸ்டேஷனை விட்டு வெகு தூரம் வந்த பிறகு அவள் தன் முகத்தைத் திருப்பிப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு இளைஞனை நோக்கி, "இப்போ போனது என்ன ஸ்டேஷன்? பேரைப் பார்க்க மறந்துட்டேன்" என்றாள்.

அந்த இளைஞன், "திருப்பரங்குன்றம். அதோ பார் கோயில் கோபுரம்! அதோ தெப்பக் குளம்!" என்றான். அவள் மறுபடியும் ஜன்னல் பக்கம் வெளியே முகத்தைத்

திருப்பி, கை கூப்பி விட்டு, கன்னங்களில் ஒசவித்துக் கொண்டாள். அவள் செய்கையில் அந்த இளைஞனும் கலந்து கொண்டான்.

அடாடா......ராகவன் கருத்தில் பதிந்து விட்ட அந்த அன்பும் ஆசையுமான முகம், அது அவளிடம் இன்னமும் அப்படியே இருந்தது. அந்தக் கண்களில் அதே மலர்ச்சி...... அதே அழகு ...... கொஞ்சமாவது மாற்றமுண்டா? ஊஹூம்......

ஆனால் திருப்பரங் குன்றத்தில் ராகவன் வண்டியில் ஏறினபோதே அவள் அவனைப் பார்த்து விட்டாள். இப்போதைய ராகவனின் மனசைப் போலவே அவளுக்கும் அப்போது 'திக்' கென்றது......அவளுடைய இதய தாபம் கண்களிலிருந்து ஜலத்தை வரவழைக்கப் பார்க்கவே ஜன்னலுக்கு வெளியே முகத்தை நீட்டி விட்டாள். எதிரேயிருந்த ஸ்டேஷனும், அதன் பெயர் பொறித்திருந்த 'போர்டும்' அதனால்தான் அவள் கண்களுக்குத் தெரியவில்லை. ஆனால் உடனே சமாளித்தவளாய், தன் கணவனை நோக்கி, "இதென்ன ஸ்டேஷன்?" என்று கேட்டாள்.

அவளுடைய கணவனின் முகம் ராகவன் மேல் பதிந்தது. ராகவன் தன் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டவனாய் வண்டியின் மோட்டைப் பார்த்தான்; பிறகு தலையை மெள்ளக் கீழிறக்கினான். மீண்டும் அந்த இளைஞன் அவனையே கவனிப்பது போல அவன் உள்ளுணர்ச்சிக்குப் படவே, குனிந்து பெட்டியைத் திறந்து ஒரு தமிழ்ப் பத்திரிகையை எடுத்தான். படிப்பதுபோல் பத்திரிகையை முகத்துக்கு நேரே பிடித்துக் கொண்டான்.

இளைஞன் அவளிடம் பேசினான்:

"என்ன கோகிலா, பேசாமலிருக்கிறாயே? இதோ பசுமலை ஸ்டேஷன் போய்விட்டது. அடுத்தது மதுரை......"

கோகிலா அவனை நிமிர்ந்து பரிதாபமாகப் பார்த்தாள். பிறகு பத்திரிகையில் முகத்தைப் பதித்துக் கொண்டிருந்த ராகவனையும் ஒரு கண நேரம் கடைக் கண்ணால் நோக்கிவிட்டு, மறுபடியும் கணவனைப் பார்த்தாள்.

"பெண்கள் வண்டியில் ஏற்றி விடட்டுமா?"

இதற்கும் கோகிலா பேசவில்லை. அவளுடைய கண்களில் கண்ணீர் பொங்கி வந்தது. தலைப்பை எடுத்து முகத்தை மூடிக் கொண்டாள்.

"அட அசடே! இதை நீ விருதுநகரிலேயே சொல்லி யிருந்தால் நானும் உன்னுடன் வருவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருப்பேனே?"

"நீங்கள் எப்படி ஏற்பாடு செய்வீர்களாம்? நாளைக்கு மதுரையில் 'டியூட்டி' ஒத்துக் கொள்ள வேண்டாமா?"......அதற்கு மேல் கோகிலத்தால் பேச முடியவில்லை.

ராகவன் முகத்தைப் பத்திரிகையிலிருந்து எடுத்து அந்த இளைஞனை நோக்கினான். அதே சமயம் அந்த இளைஞனும் அவனைப் பார்த்தான். கோகிலா மறுபடியும் முகத்தை ஜன்னலுக்கு வெளியே நோக்கி யிருந்தாள்.

இளைஞன் "புறமுறுவல் செய்தான். அவனுடைய களங்கமற்ற சாந்தமான புன்னகை ராகவனுக்கு மிகவும் பிடித்தது.

"எது வரையில் போகிறீர்கள், ஸார்?" என்று கேட்டான் இளைஞன்.

"தஞ்சாவூர் வரையில் போகிறேன்......" என்றான் ராகவன்.

"ஏன், மெயில் வண்டிகளில் போயிருக்கலாமே......இந்தப் 'பாஸஞ்சரில்'......"

"நான் ஒரு 'ட்ராவலிங் ஸேல்ஸ்மன்' ஸார்......எங்கேயாவது நினைத்தால் இறங்கி விடுகிறது சௌகரியமில்லையா?"......

"நல்ல வேளை, கோகிலா, உனக்கு இனிமே பயம் வேண்டாம்......அவர் கூடத் தஞ்சாவூர் வரையில் போகிறாராம்...... ஸார்! கொஞ்சம் திருச்சினாப்பள்ளியில் இவளை இறக்கி விட்டுடணும்......அதி காலையிலே வண்டி அங்கே போகிறது. என் தம்பியாவது, வேறே யாராவது ஸ்டேஷனுக்கு வந்திருப்பார்கள்...... கொஞ்சம் துணையாக......"

ராகவன் தலையை ஆட்டினானே யொழியச் "சரி" என்று வாய் திறந்து சொல்ல முடியாமல் குழம்பித் தவித்தான். அவன் மனம் மீண்டும் 'இதுவும் உண்மைதானா?' என்று அவனைக் கேட்டுக் கொண்டிருந்தது. ஆனால் கோகிலாவோ இந்தப் பேச்சைச் சட்டை செய்ததாகவோ, மறுக்க முன்வந்ததாகவோ காட்டிக் கொள்ளவில்லை. சலனமின்றி அவளுடைய கணவனுடைய முகத்தை மட்டுமே அவள் நோக்கிக் கொண்டிருந்தாள்.

ராகவன் ஒரு மாதிரி சமாளித்துக் கொண்டு, "அதற்கென்ன ஸார், அப்படியே ஆகட்டும்" என்றான்.

மதுரை ஜங்ஷனில் வண்டி நின்றது. அந்த இளைஞன் வண்டியை விட்டு இறங்கினான். அவனுடன் 'கம்பார்ட் மெண்டில்' இருந்த அநேகர் இறங்கி விட்டனர். மதுரை ஸ்டேஷனிலேயே வண்டியில் ஏறினவர்களுடைய தொகை அன்றைக்கு ரொம்பக் குறைவுதான்.

ஆகவே ராகவனும் கோகிலாவும் எதிரும் புதிருமாக ஆளுக்கொரு பெஞ்சியில் அமர்ந்திருந்தனர்.

"உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். ராத்திரி பால் சாப்பிட மறக்க வேண்டாம்" என்றாள் கோகிலா, பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த தன் கணவனை நோக்கி.

வண்டி நகர ஆரம்பித்தது......

"அடுத்த மாசமே 'லீவில்' வரேன்......" என்றான் இளைஞன்.

"சரி......" என்றாள் கோகிலா. அவள் கண்களில் கண்ணீர் வந்தது......

"ஸாருக்குத்தான் ரொம்ப சிரமம்!" என்றான் இளைஞன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, ஸார்......" என்ற ராகவனின் இந்தக் கடைசி வார்த்தைகளுடன், வண்டியின் வேகம் அதிகமாகி அந்த இளைஞனையும் பிளாட்பாரத்தையும் மதுரை நகரிலேயே தங்க வைத்துவிட்டது.

வண்டி மூன்று நிமிஷங்களுக்கு ஓடிவிட்ட பிறகு கூட வெளியில் நீட்டியிருந்த தன் தலையை உட்புறமாக இழுக்காமலிருந்தாள், கோகிலா. ராகவனும் பத்திரிகையிலிருந்து முகத்தை எடுக்காமலிருந்தான்.

திடீரென்று 'சில்'லென்ற காற்று ஜன்னல் வழியே புகுந்து வந்தது. கோகிலா முகத்தை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள். நேரே ராகவனை—அதே ராகவனைப்—பார்த்தாள். அவன் இளமை அப்படியே இருந்தது. அந்த அழகு முகத்தில் எந்தவிதமான சலனமுமில்லை. கவலையோ, ஏதாவது துக்கத்தினால் ஏற்பட்ட மனத்தாங்கலின் சாயையோ கூட அந்த முகத்தில் இல்லை. காற்றில் பறந்த அவனுடைய சுருளான கிராப்பின் கவர்ச்சியும் பளபளப்பும் அப்படியே இருந்தன. சற்று நேரத்துக்கு முன்பு அவளைப் பார்த்து ராகவன் நினைத்தது மாதிரியே, அவனைப் பார்த்து அவளும் இப்போது நினைத்தாள்...

ராகவனும் முகத்தை நிமிர்த்தி அவளைப் பார்த்தான்.

"ஏன், மணியாகி விட்டதே......படுத்துக் கொள்ளலாமே......" என்றான்.

"பரவாயில்லை!" என்றாள் கோகிலா. கொஞ்ச நேரம் தாமதித்துவிட்டு, "நான் என் இஷ்டப்படி பெண்கள் வண்டிக்குப் போயிருப்பேன், போவதாகத்தான் இருந்தேன்......" என்றாள்.

ராகவன் சிரித்தான். சிரிக்கவேண்டுமே என்பதற்காக அவன் சிரித்ததைப் போலிருந்தது.

"ஏன், உன் கணவர் கூட ஆக்ஷேபித்திருக்க மாட்டாரே!" என்றான் அவன்.

"ஆக்ஷேப சமாதானங்களுக்கெல்லாம் அவருடைய அன்பே நிறைவான உள்ளம் இடம் கொடுப்பதில்லை" என்றாள் கோகிலா பட்டென்று.

"சந்தோஷம்......"

ராகவன் இப்படிச் சொல்லிவிட்டுக் கோகிலாவை உற்றுப் பார்த்தான்; அவளுடைய அழகிய நீலோற்பலம் போன்ற நயனங்கள் க்ஷண காலத்துக்குக் கலங்கிப் பிறகு தெளிந்து கொண்டதை அவன் கண்டு கொண்டான். தான் ஏன் 'சந்தோஷம்' என்று சொன்னோம் என்று கூட அவனுக்குப் பட்டது.

கோகிலா எழுந்து படுக்கையை அவிழ்த்துத் தன் பெஞ்சியில் விரித்துக் கொண்டாள். இரண்டு தலையணைகளையும் உதறி ஒன்றாய்ச் சேர்த்து வைத்துக் கொண்டாள்; வர்ண மயமாயிருந்த போர்வையையும் உதறி, அழகாய் மடித்து ஜமக்காளத்தின் மேல் போட்டுக் கொண்டாள்......

ராகவன் பத்திரிகையில் முகத்தைப் பதித்திருந்ததைத் திரும்பிக் கோகிலா பார்த்தாள்; அவனருகிலே, காலியான பெஞ்சியில் சிறிது தூரத்தில் இருந்த அழுத்தமான தோல் பையையும் பார்த்தாள்...ஒரு'ட்ராவலிங் சேல்ஸ்மனுக்கு அதை விடவும் வேறு ஒரு 'தலைக்கு உயரக் கட்டை' தேவையில்லைதான்..."

ஆனால்...

"இந்தாருங்கள்" என்று தன் இரண்டு தலையணைகளில் ஒன்றை அவனிடம் நீட்டினாள் கோகிலா. கூடவே இடது கையில் அந்த வர்ணமயமான போர்வையையும் அவனிடம் நீட்டினாள்.

'நிஜமாகவா, கோகிலா!' என்று அவனுக்குக் கதற வேண்டும் போலிருந்தது; ஆனால் அந்த உள்ளுணர்ச்சி வந்த வேகத்திலேயே உள்ளுக்குள் அடங்கி விட்டது.

"பரவாயில்லை......" என்று இழுத்தான் ராகவன்.

"இல்லை, நீங்கள் வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்!" என்றாள் கோகிலா.

அவள் கண்களில் அந்தப் 'பழைய' கண்டிப்பு ஒரு க்ஷணம் தெரிந்து மறைந்தது. ராகவன் பெட்டிப் பாம்பாய் ஆகிவிட்டான். தலையணையையும் பெட்ஷீட்டையும் வாங்கிக் கொண்டு, தன் பெஞ்சியில் விரித்துக் கொண்டான்.

ராகவனைக் களைப்பு மீறியது. அவன் படுத்துக் கொண்டு கண்களை மூடிக்கொண்டான். அவன் கையில் பிடித்திருந்த பத்திரிகை நழுவிப் பெஞ்சியினடியில் விழுந்திருந்தது. கோகிலத்துக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. ராகவன் படுத்திருந்த பெஞ்சுக்கு அடியிலிருந்த பத்திரிகையை எடுத்துப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள் கோகிலா.



வண்டி கட கடவென்று ஓடிக்கொண்டிருந்தது. கோகிலா, புஸ்தகத்துக்குள்ளே கண்களைப் பதித்திருந்தவள், அவளையுமறியாமல் கண்களை எடுத்து ராகவன் பக்கம் திருப்பினாள். இதென்னது! அவன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி யிருக்கிறதே; கண்ணீரில் தலையணை நனைந்திருக்கிறது!

அடபாவி! அன்றைக்கு விட்டமாதிரியே இன்றைக்கும் கண்ணீர் விடுகிறான்; கண்ணீர் விடுகிற பெண்களை நீலி என்பார்கள்; இங்கே இவன் ஒரு ஆண் பிள்ளை!

கோகிலாவின் சிந்தனை அதன் கூட்டிலிருந்து தாவி, 'அந்தக் காலத்தின்' ஒரு சம்பவத்துக்குத் தாவியது.

ஊரைச் சுற்றி அந்தியின் லேசான இருட்டு கவிந்து கொட்டிக் கொண்டிருந்தாலும், மேற்கே வானத்தில் முளைத்து விட்டிருந்த அரை நிலாவின் வெளிச்சம் பளிச்சென்று வீச ஆரம்பித்து அந்த இருட்டை ஓட்டிக் கொண்டிருந்தது.

அக்கிரகாரத்துக் கோடியிலிருந்து ஆற்றங்கரையை நோக்கிச் சென்று கொண்டிருந்த சேறும் சகதியுமான பாதையின் இரு மருங்கிலும் ஒரு சவுக்கத் தோப்பு இருக்கும். அந்தத் தோப்பின் நடுவில், இருட்டு சூழ்ந்து வந்து கொண்டிருந்தது.

அங்கே அவள்—கோகிலா — நின்றுகொண்டிருந்தாள். இடுப்பில் பளிச் சென்ற குடம்; குடத்துக்குள் 'களுக் களுக்' என்று தளும்பும் ஜலம்; உடம்பு முழுவதும் யௌவன ஒய்யாரம்......ஆனால் முகத்தில் மாத்திரம் எப்படிப்பட்ட கடின பாவம்?

கோகிலத்தின் எதிரே — அவன், ராகவன் நின்று கொண்டிருந்தான், ஏதோ பெரிய குற்றவாளியைப் போல.

"நீங்கள் இப்படிச் செய்வீர்கள் என்று நான் நினைக்கவில்லை!" என்றாள் கோகிலா.

"நான் செய்தது இவ்வளவு தூரத்தில் போய் நிற்கும் என்று நான் நினைக்கவே இல்லை, கோகிலா! ஆனால் இதற்கு முழுப் பொறுப்பும் நான் மட்டும் ஏற்றுக்கொள்ளணும் என்கிறாய்?" என்றான் ராகவன்.

"இப்பொழுது நான் வீட்டுக்கு எப்படிப் போவேன்? நானும் நீங்களும் ஆத்தங்கரையில் பேசிக்கொண்டிருந்ததை இத்தனை நாழிகைக்குப் பிள்ளை சம்சாரம் என் அம்மா கிட்டே போய்ச் சொல்லி யிருப்பாளே? அம்மா என்னை......"

"கோகிலா! உன் அம்மா உன்னைக் கேட்டால், உன்னை இந்த வம்பில் நான்தான் இழுத்து விட்டேன் என்று நீ தாராளமாய்ச் சொல்லு. என்னைக் கூப்பிட்டுக் கேட்பார்கள். நான் உன்னை விட்டுக் கொடுக்காமல்......"

"என்னை விட்டுக் கொடுக்க மாட்டீர்களே?"

"கோகிலா! நீ ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? நாம் இருவரும் ஆற்றங்கரைப் பிள்ளையாருக் கெதிரில் பேசிக்கொண்டிருந்தது கணக்குப் பிள்ளை சம்சாரத்தின் காதிலே விழுந்திருக்கும் என்று நீ நினைக்கிறாயா?"

"நீங்கள் அப்படி நினைக்க வேண்டாம். 'இந்தப் பிள்ளையார் எதிரே சொல்லுகிறேன். உன்னைத்தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்' என்று நீங்கள் இரைந்சு சொன்னது நிச்சயம் அந்த அம்மாள் காதிலே விழுந்திருக்கும்..."

"இதற்கு நீ பயப்படாதே!" என்று முடிவாகச்சொன்னான் ராகவன், வாலிப முறுக்கில்.

கோகிலா பயப்படவில்லை; ஆனால் அந்தச் சமயம் வந்தபோது ராகவன்தான் பயந்து விட்டான்......

"அவன் தான் ஆண் பிள்ளை என்கிறதை ரூபித்துவிட்டான், பாரு! அவன் வந்தானா? அவன்......பிள்ளையார் எதிரே என்னமோ சொன்னானும், அதை இவ கேட்டுக் கொண்டு இருந்தாளாம்...... அன்றைக்கே, கோவிலிலேயே கண்டிக்கணும்னு இருந்தேன். எல்லாரும் அம்பாளுக்குத் தீபாராதனை ஆகிறதைப் பார்த்துக் கொண்டு இருந்தபோது, நீ மட்டும் அவனைப் பார்த்துக் கொண்டே இருந்தாய்!......"

இப்படி கோகிலத்தின் அம்மா அன்றைக்குச் சொல்மாரி பொழிந்தாள். கோகிலத்தின் பக்கம் பேச அவளுடைய காதலன் வருவதாகச் சொன்னவன் வரவே யில்லை.

அப்புறம் கோகிலா கல்யாணமாகிச் செல்வதற்கு முன்பே ராகவனும் அவன் தாயும் ஊரை விட்டுப் போய்விட்டார்கள்......

அன்றைக்கு வாழ்க்கையில், ஒரு முக்கியமான திருப்பத்தில் தன்னைக் கை விட்டவன் இன்றைக்கு ரயில் வண்டியில் தனக்குத் துணையாக வருகிறான். இந்தத் துணை யாருக்கு வேணும்?......

கோகிலா திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஆ! இதென்ன? எதிர் பெஞ்சு காலியாயிருந்தது. அவளுடைய வர்ணமயமான போர்வையையும் தலையணையையும் தவிர ராகவனையோ அவனுடைய தோல் பெட்டியையோ அவள் அங்கே காணவில்லை......

கோகிலா கீழே சுருண்டு விழுந்திருந்த ஒரு துண்டுக் காகிதத்தைக் கவனித்தாள். துள்ளி எழுந்து அதை எடுத்துப் பிரித்தாள். அதில்:

"அன்றைக்கு நான் உன்னை அநாதரவாக விட்டுச் சென்றேன். என்னால் அதை இன்னும் மறக்க முடியவில்லை. இன்றைக்கு உன்னைத் திருச்சினாப்பள்ளி வரையில் பத்திரமாகக் கொண்டு சேர்க்க எனக்கு என்ன உரிமை, பவிஷு இருக்கிறது! நான் மணப்பாறையிலேயே இறங்கிக் கொள்கிறேன். என்னுடைய இந்தச் செயல் உனக்கு நிச்சயம் ஆச்சரியத்தைத் தராது என்றே நம்பும்,

உன் சகோதரன்,

ராகவன்."

கோகிலா நீண்ட பெருமூச்சுடன் வண்டிக்கு வெளியே பார்த்தாள். விடியற்காலையின் சுகமான, குளுமையான தென்றல் வீசியது. தூரத்தில் திருச்சி நகரத்து விளக்குகள் மினுக் மினுக் கென்று தெரிய ஆரம்பித்தன.

## எழும்பூர் டிராமாடிக் சொஸைடி (ரிஜிஸ்டர்டு)

○●○

17-8-1952 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணிக்கு

### சென்னை எழும்பூர் மியூஸியம் தியேட்டரில்

| | | |
|---|---|---|
| ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி | ... | பாட்டு |
| ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி | ... | பிடில் |
| ஸ்ரீ டி. கே. மூர்த்தி | ... | மிருதங்கம் |
| உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராம அய்யர் | ... | கடம் |

**டிக்கட்டுகள்: ரூ. 10, 5, & 2-8-0**

---

## B. I. S. N. கம்பெனி லிமிடெட்

# S. S. "ரஜுலா"

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**

சென்னையிலிருந்து { 30 ஆகஸ்டு 1952 / 24 செப்டம்பர் 1952 — நாகப்பட்டினத்திலிருந்து { 31 ஆகஸ்டு 1952 / 25 செப்டம்பர் 1952

தேதிகளில் மேற்கண்ட கப்பல் புறப்படலாமென எதிர்பார்க்கப்படுகிறது

குடியேறுவோர் பாதுகாப்பு அதிகாரி (புரொடெக்டர் ஆப் எமிக்ரென்ட்ஸ்) யிடமிருந்து "ஆட்சேபணையில்லை" என்ற அத்தாட்சி சர்டிபிகேட் உடையவருக்குத்தான் குறிப்பிட்டு விரும்பும் பிரயாணத்திற்கு பர்த் வசதியற்ற டிக்கெட்டுகள் சாப்பாட்டுடனோ அல்லது சாப்பாடு இன்றியோ கம்பெனியாரால் வழங்கப்படும்.

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூருக்கு கார்கோ சாமான்களை நேரடியாக ஏற்றிச் செல்லவும், பாங்காக், ஹாங்காங், ஜப்பான் மற்றும் தூரக் கிழக்குத்திசையிலுள்ள இடங்களுக்குச் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி அனுப்பும்படியும் ஏற்றுக் கொள்ளப்படும்

இதர விவரங்களுக்குத் தயவுசெய்து விண்ணப்பிக்கவும் :

பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்
7, அரமனைக்கார தெரு, மதராஸ்

மதுரா கம்பெனி லிமிடெட்
முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம்

---

## "டவ்" வாசனை சோப் போட்டி

### வெளியூர் போட்டி நேயர்களுக்கான ஓர் அறிக்கை

○●○

Prospective Entrants are informed that the closing date of the competition has been extended till 30th September 1952. If winners are unable to travel to Madras to receive their prizes, arrangements will be made to send them to Winners' home addresses.










**நீங்கள் எங்கிருந்தாலும்...**

# ஹிமாலயா புக்கே ஸ்னோ

**உபயோகியுங்கள்.**

ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின் சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கே ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBS 6A-X30 TM

இராஸ்மிக் கம். லிட்., சென்னை இந்தியாவில் தயாரித்தது.




## 8. உண்மை வென்றது !

மன்னர்க்கு மன்னனான காந்தாரதேசத்து அரசனைச் சூரியகுமாரன் கொல்லச் சூழ்ச்சி செய்தான் என்று அவனுடைய மூத்த சகோதரர்கள் இருவரும் கூறவே சபையோர் ஸ்தம்பித்து விட்டனர். 'இது வெறும் பொய்' என்று நிரூபிக்க வழி தெரியாமல் தலை கவிழ்ந்து நின்று விட்டான் சூரியகுமாரன். சூரியகுமாரனுடைய மௌனத்தைக் கண்டு காந்தார தேச மன்னனும், சபையோரும் மூத்தவர்கள் கூறியது உண்மைதான்போலும் என்று நம்பலானார்கள்.

இந்த நிலையை உணர்ந்த மூத்த ராஜகுமாரர்கள், "இத்தகைய மகா பாபச் செயலைச் செய்யத் துணிந்தவனைக் கழுவேற்ற வேண்டும். அதுதான் தகுந்த தண்டனை. மனு நீதி வழங்கும் மன்னர், மகனாயிற்றே என்று பாரபட்சம் பாராமல் தண்டனை வழங்குவார் என்று நம்புகிறோம்" என்றார்கள்.

மகாராஜாவின் நிலைமை ரொம்பவும் தர்ம சங்கடமாகி விட்டது. சூரியகுமாரன் என்றால் அவருக்கு ரொம்பவும் பிரியம். அவருடைய உள் மனசு 'சூரியகுமாரன் எத்தகைய சூழ்ச்சியிலும் இறங்கி யிருக்கமாட்டான், அதற்கு மாறாக அவனே ஏதோ சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டுவிட்டான்' என்று திரும்பத் திரும்பக் கூறியது. மனசு சொன்னபடி மன்னன் நடக்க முடியாதே. நீதியல்லவா வழங்க வேண்டும்? ஆகவே, மன்னன் மந்திரியைப் பார்த்து, "மந்திரி! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்.

மன்னரின் மன நிலையை அறிந்த மந்திரி "மகாராஜா, இளவரசர் சூரிய குமாரருக்குத் தூக்குத் தண்டனையோ கழுவேற்றும் தண்டனையோ கொடுக்க வேண்டும் என்பதில்லை. நாடு கடக்கச் செய்தால் போதும்" என்றார்.

சபையோரும், சூரியகுமாரன்பால் மிகுந்த அன்புள்ளவர்களாதலால், "மந்திரி சொன்னதே சரி! முதன் மந்திரி கூறியதே சரி!" என்று எல்லோரும் சேர்ந்து கூறினார்கள். இதைக் கேட்டதும் மூத்த ராஜ குமாரர்கள் அடைந்த ஏமாற்றத்துக்கு அளவில்லை.

* * *

சூரியகுமாரன் ராஜ சபையை விட்டு, தான் பிறந்த காந்தார தேசத்தை விட்டு, சாதாரண வழிப்போக்கன் உடையில் புறப்பட்டான். அவனுக்கு வாழ்க்கையில் எல்லாமே வெறுப்பாக இருந்தது. தான் இவ்வளவு சிரமப்பட்டு ஜீவரசம் கொண்டு வந்ததை, தான் கொண்டு வரவே இல்லை என்று சாதித்ததுமன்றித் தந்தையைக் கொல்லவும் சூழ்ச்சி செய்ததாக அபாண்டமான பொய்யைச் சுமத்தினால் அவனுக்கு வெறுப்பு ஏற்படுவது இயல்புதானே! அதுவும் தான் காப்பாற்றிய சகோதரர்களே நயவஞ்சகம் செய்தால், இந்த உலகில் வாழ்ந்துதான் என்ன பயன் என்ற அளவுக்கு எண்ணலானான். ஆகவே, யாரையும் ஒரு வாய் சோறு போடு என்று கேட்கவில்லை. மக்களே, "இவன் யாரோ உயர் குலத்தைச் சேர்ந்தவன் போலிருக்கிறதே" என்று கருதிச் சோறு போட்டு உபசரிப்பார்கள். தூக்கம் வந்த நேரம் மரத்தடியிலும் சரி, சாவடித் திண்ணையாயினும் சரி படுத்துத் தூங்கிவிடுவான்.

இப்படி இவன் தேச தேசங்களாகச் சுற்றி வந்தபோது சாந்தகுமாரியின் நினைவு அடிக்கடி வரும். ஆனால் அவன்தான், அவன் எந்த தேசத்து ராஜகுமாரி என்று கேட்டுத் தெரிந்துகொள்ளவில்லையே! ஐம்பத்தாறு தேச ராஜாக்களில் எந்த தேசத்து இளவரசி என்று கண்டு பிடிப்பது! அப்படிக் கண்டு பிடிப்பதால்தான் என்ன பலன் ஏற்பட்டு விடப் போகிறது? சொந்த நாட்டை விட்டுத் துரத்தப்பட்டு, ஆண்டிப் பண்டாரம் போல் சுற்றும் சூரியகுமாரனை அவள் கண்களால் ஏறெடுத்தும் பார்ப்பாளா? — மாட்டாள்.

இப்படியே அவன் எண்ணி வந்தான். ஆயினும் அவன் மனசுக்குள் ஒரு தரமாகிலும் சாந்த குமாரியைப் பார்த்தால் தேவலை என்றே ஏங்கினான்! அந்தப் பாக்கியம் இந்த ஜன்மத்தில் கிட்டுமா என்றும் ஏங்கினான்.

சூரிய குமாரன் பித்துப் பிடித்தவன் போல் சுற்றி வந்தபோது ஒரு நாள் காலை ஏதோ ஒரு நாட்டின் தலைநகரை அடைந்தான். அந்த நகரத்தில் அரண்மனை வெளி வாசலிலிருந்து ராஜ சபை வரை வழி யெல்லாம் பொன்னும் மணியும், நவரத்தினங்களுமாகப் பதித்து அழகுபடுத்தி யிருந்தது. அந்த நவரத்தின கசிதமான பாதைக்குப் பக்கத்தில் ஒரு ஒற்றையடிப் பாதை இருந்தது. அந்த ஒற்றையடிப் பாதையில்தான் எல்லோரும் போய் வந்தனர். அதைத்தான் போக்கு



வரத்துக்கு உபயோகித்து வந்தனர். ஆம், நவரத்தினங்களின் மீது காலை எடுத்து வைக்கவும் யாருக்காகிலும் மனம் துணியுமா?

ஆனால் நம் சூரிய குமாரன் தான் நடப்பது நவரத்தின கசிதமான பாதை என்பதை யுணராமலே தான் பாட்டுக்கு அந்தப் பாதையில் நடந்து அரண்மனைக்குள் சென்றான். முதலில் சூரியகுமாரன் நுழைவதைக் காவலாளிகள் யாரும் கவனிக்கவில்லை. ஆனால் அரண்மனைக் கட்டிடத்துக்கு வெகு சமீபத்தில் வந்தபோது தான் அங்கிருந்த ஒரு காவலாளி கவனித்தான். "ஏய் பைத்தியம்! எங்கே வருகிறாய்? பெரிய இளவரசரைப் போல அல்லவா நவரத்தினப் பாதையிலே நடந்து வருகிறாய்! வெளியே போ!" என்று அவனை விரட்டினான்.

அதே சமயம், "காவலாளி, நிறுத்து" என்று உத்தரவிட்டு விட்டு, "சூரிய குமாரா, வா வா!" என்றது ஒரு குரல். ஏதோ மனோராஜ்யத்தில் மூழ்கி நடந்து வந்த சூரிய குமாரன் தலை நிமிர்ந்து பார்த்தான்: "ஆ! சாந்தகுமாரி" என்றான். அவன் உள்ளத்தில் ஆனந்த ஊற்றுப் பெருக்கெடுத்தது!

* * *

சாந்தகுமாரி சூரிய குமாரனிடம் விடை பெற்றுக்கொண்டு மாயக் குதிரை மீது ஏறித் தன் நாட்டை வந்தடைந்தாள். அவள் வருகைக்காக ஆவலுடன் அந்நாட்டு மக்கள் காத்திருந்தனர். காரணம், தன் புதல்வி மறைந்த சில நாட்களுக்கெல்லாம் அந்த தேச ராஜா, அதாவது சாந்த குமாரியின் தந்தை உயிர் துறந்தார். மன்னர் இறந்த சில நாட்களில் மன்னரின் இளைய மனைவியும் உயிர் நீத்தாள். ஆகவே, தேசத்தை ஆள அரச குடும்பத்தினர் யாருமில்லாமல் தங்களைத் தாங்களே ஆண்டு வந்தனர். இந்த நிலையில் சாந்தகுமாரி குதிரை மீது ஆரோகணித்துத் தன் நாட்டை அடைந்தபோது மக்கள் அடைந்த குதூகலத்துக்கு எல்லையே இல்லை. அவளையே நாட்டை யாளும்படி கோரினர். அவள் எந்த தேசத்து இளவரசரை மனம் விரும்பி மணந்து கொள்கிறாளோ அந்த இளவரசரைத் தங்கள் மன்னராக ஏற்கத் தயார் என்றார்கள்.

சாந்தகுமாரியும் அதற்குச் சம்மதித்துச் சில நாட்கள் மௌனமாக இருந்தாள். சூரிய குமாரன் தன்னைத் தேடி வருவான் என்று எதிர்பார்த்தாள். வராமற் போகவே, ரகசியத் தூதன் ஒருவனைக் காந்தார தேசத்துக்கு அனுப்பி வைத்தாள். ஆம், சூரிய குமாரன் தான், தான் எந்த நாட்டைச் சேர்ந்தவன் என்பதெல்லாம் பரிபூரணமாக அவளுக்குச் சொல்லி யிருந்தானே?

ரகசிய தூதன், காந்தார நாட்டில் நிகழ்ந்ததெல்லாம் ஆதியோடு அந்தமாகக் கூறினான். அதைக் கேட்டுப் பெரிதும் வருத்தமுற்றாள் சாந்தகுமாரி. ஆயினும் எப்படியாகிலும் சூரிய குமாரனைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அதை முன்னிட்டுத்தான் அவள் ரத்தின கசிதமான பாதையை அமைத்தாள்.

"ரத்தின கசிதமான பாதை யமைத்தால் என்னை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்?" என்று கேட்டான் சூரிய குமாரன்.

அதற்குச் சாந்தகுமாரி, "நான் சொல்வதைக் கேட்டுக் கோபித்துக்கொள்ள மாட்டீர்கள் என்பதாக வாக்களித்தால் கூறுகிறேன்" என்றாள்.

"நீ எது சொன்னாலும் கோபிக்கமாட்டேன், சொல்!" என்றான் சூரியகுமாரன்.

"கவிதைப் பைத்தியமும் காதல் பைத்தியமும் கொண்டவர்கள்தான், தாங்கள் எங்கே நடக்கிறோம் எங்கே போகிறோம் என்ற நினைவிழந்து நடப்பார்கள் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகவே, இந்த நவரத்தினப் பாதையில் நடந்து வருபவர்கள் கவிதைப் பைத்தியங்களாகவோ, காதல் பைத்தியங்களாகவோதான் இருக்க வேண்டும் என்று சுலபமாகத் தீர்மானித்துவிட முடியும் அல்லவா? இவர்களைப் பார்த்து என்மேல் பைத்தியம் கொண்டவர் யார் என்று தெரிந்து கொள்ள மாட்டேனா?" என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டு, இதழ்களில் புன்னகை தவழக் கேட்டாள்.

"அடி கள்ளி! நான் உன் மேல் பைத்தியம் கொண்டவன் என்று தீர்மானித்து விட்டாயா?" என்றான் சூரிய குமாரன்.

"என்னைக் கனவில் கண்டு என்றைக்குப் புறப்பட்டீர்களோ அன்றைக்கே தீர்மானித்து விட்டேனே?" என்றாள் சாந்த குமாரி.

* * *

நல்ல நாள் பார்த்து, நல்ல முகூர்த்தத்தில் சாந்த குமாரிக்கும் சூரிய குமாரனுக்கும்

திருமணம் நடத்துவது என்று நிர்மான மாயிற்று. தேச தேசங்களுக்கெல்லாம் திருமண அழைப்பு ஓலைகள் அனுப்பப் பட்டன. காந்தார தேச ராஜாவுக்கும் அனுப்பப் பட்டது.

காந்தார மன்னர், திருமண அழைப்பைப் பார்த்தவுடனேயே துள்ளி எழுந்தார். சூரிய குமாரன் இருக்குமிடம் தெரிந்ததே என்று தான் முதலில் சந்தோஷப் பட்டார். அன்றைக்கே சூரிய குமாரனைப் பார்க்கப் புறப் பட்டார்.

தந்தையைக் கண்டவுடன், சூரிய குமாரன் "அப்பா!" என்று கதறிக் காலில் விழுந்து வணங்கினான்.

"அப்பா! சூரிய குமாரா! உனக்கு நான் ரொம்பவும் துரோகம் செய்து விட்டேன். முதலில் உங்களுக்கு ஜீவரசத்தைப் பற்றிக் கூறியும், பிறகு மந்திரவாதியாகி மந்திரக் கோலைக் கொடுத்தும், எல்லாவற்றிற்கும் முன்பாக ஜீவரசத்தைத் தயார் செய்து சாந்த குமாரியின் சிலையின் பின்பாக வைத்தவரு மான முனிபுங்கவர் சில நாட்களுக்கு முன் என்னுடைய ராஜ சபைக்கு வந்து எல்லா விவரங்களையும் கூறினார். அப்போதுதான் எனக்கு உண்மை புலனாயிற்று. உனக்கு எத்தகைய துரோகம் செய்து விட்டேன் என் பதை உணரலானேன்" என்றார்.

"அப்பா, ஜீவரசத்தைப் பற்றிக் கூறிய வரும் மந்திரவாதியாக வந்தவரும் எல்லாம் ஒருவரேதானா அப்பா! அப்படியானால் அவர் எத்தகைய மகான்" என்றான் சூரிய குமாரன். பிறகு "அப்பா, அண்ணாமார்கள் எல்லாரும் சௌக்கியமா?" என்று கேட்டான்.

"துரோகிகள், நீசர்கள். சிறையில் சௌக் கியமாகவே இருக்கிறார்கள்" என்றார் காந்தார தேசத்து மன்னர்.

"பாவம், அவர்களை விடுதலை செய்யுங்கள் அப்பா! சிறுவர்களாகிய நாங்கள் தவறு செய்து விட்டால் அதற்குப் பெரியவர்க ளாகிய நீங்கள் மன்னிக்க வேண்டாமா? அவர்களை விடுதலை செய்யுங்கள், அப்பா!" என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டான் சூரியகுமாரன்.

சூரிய குமாரனுடைய வற்புறுத்தலின்மீது விடுதலை செய்யப்பட்ட சம்பத் குமாரன் நிர்மல குமாரன் ஆகிய இருவருக்கும், சூரிய குமாரனுக்கும் சாந்த குமாரிக்கும் விவாகம் நிகழ்ந்த அதே முகூர்த்தத்தில், அதே மணப் பந்தலில் கல்யாணம் நடந்தது. மூன்று ராஜ குமாரர்களும், அதற்குப் பின்னர் ஒற்றுமை யாக வாழ்ந்து வந்தார்கள்! (முற்றும்)

---

# பாரதி காட்டிய பாதை

கே. அகோரமூர்த்தி

சென்றதையே நினைத்துக் கொண்டு வருத்தப்படுவது சிலரது இயற்கை. அதனால் பலன் ஏதாவது ஏற்படுமா? அதுதான் இல்லை. வருத்தமும், வருத்தத்தினால் மனச் சோர்வும், மனச் சோர்வினால் உடம்பு பலஹீனம் அடைவதும்தான் மிஞ்சும். மனிதனைக் "கெடுப்பது சோர்வு" என்று புதிய ஆத்திச்சூடி கூறுகிறது. கவலைதான் நரகம் என்று பாரதியார் சொல்லுகிறார்.

**"எப்பொழுதும் சென்றதையே சிந்தைசெய்து**
**கொன்றழிக்கும் கவலையென்னும் குழியில்வீழ்ந்து**
**குமையாதீர்: சென்றதனைக் குறித்தல் வேண்டாம்**
**இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்று நீவிர்**
**எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக்கொண்டு**
**தின்று விளையாடி இன்பமுற இசைந்து வாழ்வீர்"**

எர்னஸ்ட் ஹெமிங்வே என்ற பிரசித்தி பெற்ற அமெரிக்க எழுத்தாளர் அமெரிக்க மக்களுக்கு எழுதிய புத்தகமொன்றின் முற்குறிப்பில்: "கவலைப்படுவதனால் ஒரு நன்மையும் உண்டாகாது. எதற்காக மனிதர் கவலைப்பட வேண்டும்? இவ்வுலகத்தில் இதுவரை நடக்காதது இனி ஒன்றும் நடந்து விடப் போவதில்லை; இதுவரையில் கஷ்டத்தைச் சகித்து வந்தவர்கள் மனிதர்கள்; இனியும் மனிதர்கள் கஷ்டம் வரின் சகிக்கவும் கூடும்" — என்று உறுதியுடன் கூறுகிறார்.

தமிழர்களை இப்பொழுது பயம், சோம்பல், சோர்வு முதலியன அடிமை கொண்டு விட்டன. இவை அவர்களை முன்னேற வொட்டாமல் தடுக்கின்றன. அவர்கள் முன்னேறுவதற்கு ஒரே வழி நம்பிக்கை கொள்ளுதலே. தன்னம்பிக்கை இல்லாதவன் ஒரு காரியத்தையும் சரிவரச் செய்ய முடியாது. "பகீரதன் கங்கையை வரவழைத்த கதையை நாம் இந்தக் காலத்தில் பொய்க் கதையாகச் செய்து விட்டோம். முன்னோர், வெற்றியடைந்தோர் யாவரும் அக்கதையின் உட்பொருளைக் கொண்டனர். நம்பிக்கையினால் ஆகாய கங்கையைப் பூமிக்கு வரவழைத்தார்களாம். எத்தனை பெரிய ஆபத்துக்கள் வந்த போதிலும் அவைகளை நம்பிக்கையினால் வென்று விடலாம். நம்பிக்கையே காமதேனு" என்கிறார் பாரதியார்.

உலகப் பிரசித்தி பெற்ற நெப்போலியன் ஒரு தடவை இரண்டு லக்ஷம் எதிரிகளுடன் போர் புரிய வேண்டியிருந்தது. ஆனால் அவனுடன் இருந்தவர்களோ ஒரு லக்ஷம் பேர்களே. தன்னுடைய வீரர்கள் சோர்வுற்ற போது அவன் என்ன சொன்னான் தெரியுமா? "நண்பர்களே! நீங்கள் யாவரும் சேர்ந்து ஒரு லக்ஷம் பேர்கள். நான் மட்டும் மற்றொரு லக்ஷம், இரண்டும் சேர்ந்து இரண்டு லக்ஷம் பேர் ஆகிவிட்டது. இப்பொழுதே சென்று எதிரியைத் தோற்கடிப்போம் வாருங்கள்" என்ற ஊக்கமூட்டும், நம்பிக்கை யூட்டும் சொற்களே அவை. அவர்கள் வெற்றி பெற்றார்கள் என்று எழுதவும் வேண்டுமோ! பாரதியாரின் நம்பிக்கை மந்திரம் இதுதான்:

**"நம்பினோர் கெடுவதில்லை**
**இது நான்கு மறைத் தீர்ப்பு—**
**இது நான்கு மறைத் தீர்ப்பு"**

இதைத் திருப்பித் திருப்பி ஓத வேண்டும். 'ஜயமுண்டு பயமில்லை, மனமே' என்று மனதிற்கு அறிவுறுத்த வேண்டும்.

ஒரு பொழுதும் "நான் ஏழை, தீண்டாதவன், பாபி, பலஹீனன், அடிமை" என்று எண்ணக் கூடாது. உலகத்தில் உள்ள எல்லாப் பெரிய செயல்களையும் செய்தவர்கள் ஏழைகளே. இயேசு கிறிஸ்துவும் 'நீ தாழ்ந்தவன் என்று எண்ணாதே; நீயே உனக்குப் பகையாகாதே' என்று சொல்லுகின்றார். தன்னம்பிக்கை உண்டானால் வீரம், தீரம், செல்வம், வெற்றி யாவும் வலியவந்து சேரும்

**"வயிரமுடைய நெஞ்சு வேணும்**
**இது வாழும் முறைமையடி பாப்பா"**

என்றார் பாரதியார். மேலும் 'துணிவுள்ளவனே அறிவுள்ளவன்' என்று மற்றொரு இடத்தில் கூறுகிறார். "பாரத வாசிகள் புனருத்தாரணம் பெறுவதற்குத் துணிவு வேண்டும். துணிவே தாய். அதிலிருந்து தான் கல்வி முதலிய மற்றெல்லா நன்மைகளும் பிறக்கின்றன. எடுத்ததற்கெல்லாம் அஞ்சும் இயல்புடைய கோழை யொருவன் தன்னைப் பல சாஸ்திரங்கள் கற்றவன் என்றும், அறிவாளி யென்றும் சொல்வானானால் அவனை நம்பாதே. அவன் முகத்தில் காறி உமிழ்ந்துவிட்டு அவனிடம் பின் வருமாறு சொல். 'அப்பா, நீ ஏட்டைத் துளைக்கும் ராம பாணப் பூச்சியைப் போல், பல நூல்களைத் துளைத்துப் பார்த்து ஒருவேளை வாழ்நாளை வீணாக்கி யிருக்கக்கூடும். ஆனால் அச்சம் இருக்கும்வரை அறிவாளி ஆக மாட்டாய். அஞ்சாமைக்கும், அறிவுக்கும் நம் முன்னோர்கள் ஒரே சொல்லை—"தைரியம்"—உபயோகப்படுத்தி யிருக்கிறார்கள். அதை நீ அறியாய் போலும்!' என்று அச்சத்தை மடைமை என்று கூறியுள்ளார்.

துணிவினாலும் நம்பிக்கையினாலும் வெற்றியடைந்தவர்களுக்கு உதாரணமாகத் தெர்மோபைலே என்ற இடத்தில் இரண்டு லக்ஷம் பாரசீக சைன்யத்தைச் சிதற அடித்து வெற்றி கண்ட 4000 ஸ்பார்த்தா (Sparta) தேசத்து வீரர்களைக் காட்டலாம். எதிரிகளுடைய கணக்கைத் தெரிவிப்பதற்காக ஒருவன் அவர்களுடைய ஈட்டிகள் சூரியனை மறைத்து விட்டன என்னும் பொழுது, ஒரு ஸ்பார்த்தா வீரன் "ரொம்ப நல்லதாய்ப் போய்விட்டது. அவர்கள் வெய்யிலில் நின்று சண்டை போட்டால் நாம் சுகமாக அவர்களுடைய நிழலில் நின்று சண்டை போடலாம்!" என்றானாம்.

அத்தகைய துணிவு பெற பாரதியாரின் வழிகளில் சில இவைகள் :

"அச்சமில்லை, அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே
இச்சகத்துளோ ரெல்லாம்
எதிர்த்து நின்றபோதிலும்
அச்சமில்லை, அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே—
உச்சிமீது வானிடிந்து
வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே" என்பதும்,

"வலிமை, வலிமை யென்று பாடுவோம்
என்றும் வாழுஞ் சுடர்க்குலத்தை நாடுவோம்
கலியைப் பிளந்திடக் கை யோங்கினோம்
கவலை யிருளனைத்தும் நீங்கினோம்"

நம்பிக்கையும், துணிவும் ஏற்பட்ட பின் வெற்றி கொள்ள, வேண்டியது முயற்சி. முயற்சி யுடையார் முடிவில் வெற்றி பெறுவார் என்பதற்குச் சான்று, புகழ் பெற்ற விஞ்ஞானிகளின் வாழ்க்கைகளே. அவற்றுள் மதாம் க்யூரியின் வாழ்க்கையைப் பாருங்கள். எவ்வளவு இடர்கள் ; முடிவில் முயற்சியினால் "ரேடியம்" என்ற புது உலோகத்தைக் கண்டு பிடித்தனள். விஞ்ஞானிகளுக்கு இடைஞ்சல்கள் மட்டுமல்ல, தோல்வியும் சகஜம். அதனால் முயற்சியைக் கைவிடுகின்றார்களா? இம் முயற்சிக்குப் பகை சோம்பல். பாரதியார் "சோம்பலைப் போலிழிவு இல்லை" என்றும், "சோம்பல் மிகக் கெடுதி பாப்பா" என்றும் கூறுகிறார். தொடர்ந்து ஏதாவதொரு தொழில் செய்து கொண்டே யிருந்தால் சோம்பல் போய் விடும். எடிசன் என்ற விஞ்ஞானி 24 மணி நேரமும் வேலை செய்து கொண்டிருப்பாராம். வேறொரு விஞ்ஞானியை "நீர் ஏன் கலியாணமே செய்து கொள்ளவில்லை?" என்று ஒருவர் வினவியபோது, அவர் "எனக்கு அதைப்பற்றி நினைக்கக்கூடச் சமயங் கிடைக்கவில்லையே" என்றாராம்.

"வருத்த மழிய, வறுமை யொழிய" வேண்டுவது உழைப்பாகும். உழைப்பே உயர்வு. உழைப்பினாலும், முயற்சியினாலும் தான் ஒருவன் சக்தியும், வல்லமையும் பெற முடியும். மேல் நாடுகள் ஏன் வல்லரசுகள் என்றுபேர் பெற்றன? அம்மக்களின் ஊக்கத்தினாலும், உழைப்பினாலும் என்று கூறவும் வேண்டுமோ? நமது சீர்கேடான நிலைமைக்கும், ஏழைமைக்குங் காரணம் நமது உழைப்பின்மையே. மேல் நாடுகளில் பணக்காரர்களும் உழைக்கிறார்கள். இங்கோ ஏழையே தூங்குகிறான். இரவு முழுவதும் சினிமா, கூத்து, ஆட்டம், இவற்றில் வீண் பொழுது போக்கி விட்டுப் பகல் முழுவதும் தூங்கும் சோம்பேறிக் கூட்டங்களை நாம் தினந்தோறும் பார்க்கிறோம். உழைக்கவில்லையானால் உணவும் இல்லையென்பதை ஒரு விதியாகச் செய்ய வேண்டும்.

தொழிலுக்கு மேன்மை தாழ்வு கிடையாது. எல்லாத் தொழில்களும் சிறந்தனவே. "உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்" என்று தொழில்களில் வித்தியாசமின்மையைத் தெரிவிக்கின்றார் பாரதியார். நமக்குக் குருட்டு அதிர்ஷ்டம் அடிக்காதா என்று ஏங்கும் மக்களை நோக்கி,

"பயிற்றி உழுதுண்டு வாழ்வீர்—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டா"

என்று அபாயச் சங்கு ஊதுகிறார். உழைப்பின் மூலமாகத் தங்களுக்கும், நாட்டிற்கும் நன்மை தேடியவர்களுக்குச் சண்டையில் தோல்விபெற்ற ஜப்பானியர்களே சாட்சி. "இடி விழுந்தாலும் இடர்ப்படோம்" என்றார் பாரதியார். ஜப்பானியர்களோ அணுகுண்டு விழுந்த காலத்திலும் அஞ்சவில்லை. அதனால் ஏற்பட்ட சேதங்களை யெல்லாம் ஐந்து ஆண்டுகளில் சீர்திருத்தி விட்டு, இப்பொழுது சண்டைக்கு முன்பு இருந்த பழைய நிலைமையை அடைந்து விட்டனர். முன்பு போல் பிற நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பும் ஏற்படுத்திக் கொண்டு விட்டனர். இவை யாவும் எவ்வாறு முடிந்தது? தன்னம்பிக்கை ஊக்கம், உழைப்பு இவைகளினால்தான். இதுவேதான் பாரதி காட்டிய வழியும் ஆகும். பாரதி காட்டிய வழியினால் ஜப்பானியர்கள் முன்னேற்றமடைய முடியுமானால் தமிழர்களால் ஏன் முடியாது?




# Firestone

## பயர்ஸ்டோன்

கம்-டிப்பிடு டயர் இது ஒன்றே




# ஆல் இந்தியா காம்படீஷன்ஸ்

**(Regd. No. 413)**

○○●

## 1, 2 வார்த்தை போட்டி

## மாதா மாதம் ரூ. 50,000-க்கு மேல்

**பரிசுத் தொகைகள் வழங்கப்படுகின்றன**

# சுதந்திர தினம்

* இந்தியாவெங்கும் மிகவும் குதூகலமாகக் கொண்டாடும் இந்த சுதந்திர திருநாளில் நீங்கள் ஒவ்வொருவரும் எடுத்துக் கொள்ள வேண்டிய பிரதிக்ஞை என்ன?

** "நாம் ஒவ்வொருவரும் தங்கு தடையின்றி சுதந்திரமாக காலம் கழிக்க வேண்டுமென்பதுதான்."

*** ஆனால் அப்படி சுதந்திர வாழ்வு வாழ உங்களுக்கு உதவி செய்ய நாங்கள் இன்று முன் வருகிறோம்.

**** பிரதி மாதமும் ரூ. 50,000-க்கு மேல் பரிசுகள் அளித்து உங்கள் ஒவ்வொருவருக்கும் சுதந்திர வாழ்வு வாழ உதவி செய்கிறோம்.

**விவரங்களுக்கு**

மானேஜர்:

**ஆல் இந்தியா காம்படீஷன்ஸ்**

31, வாலர்ஸ் ரோட்

மவுண்டு ரோடு : சென்னை-2

மானேஜர்:

**ஆல் இந்தியா காம்படீஷன்ஸ்**

ஹெட் ஆபீஸ்:

6-A, டாடாபாட் : கோயமுத்தூர்

இந்தியா முழுவதிலும் கலெக்டர்கள் தேவை




ராஜாராமன் அறையில் உட்கார்ந்த வண்ணம் ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தான். சிந்தனைகளுக்கு எல்லை இல்லை. அவன் மனத்தில் அப்போது எழுந்த எண்ணங்கள் எல்லாம் ஒரே விஷயத்தைச் சுற்றிப் படர்ந்திருந்தன. எந்த விதமான தீர்மான முடிவுக்கும் வர முடியாமல் சிரமப்பட்டான் அவன். இடையில் அவனுடைய தாயார் பல தடவைகள் கூப்பிட்டது கூட அவனுடைய செவிகளில் விழவில்லை.

இதற்கெல்லாம் காரணம் சீதாதான். அவனுடைய கனவுக் கோட்டைகளை நிர்மாணித்தவள் அவள். அதை நினைவாக்க வேண்டிய சமயத்தில், அஸ்திவாரத்தோடு பெயர்த்து எறிந்தவளும் அவளே. இல்லாவிட்டால் அன்றைய தினம் அவள் அப்படிப் பேசியிருப்பாளா!

ராஜாராமன் பி. ஏ. பரீட்சைக்குப் பணம் கட்டிய வருஷம் அது. அவன் வீட்டிற்கு எதிரேயுள்ள பங்களா ஒன்றில் குடியேறினார் பரமேசுவரன். முதலில் அவரைப் பற்றி அவனுக்கு ஒன்றும் தெரியாது. போகப் போகத்தான் முழு விவரங்களும் தெரிய வந்தன.

பரமேசுவரன் மைசூர் சமஸ்தானத்தில் பொறுப்புள்ள ஒரு 'சர்க்கார் உத்தியோகஸ்தர்'. மைசூரிலிருந்து பங்களூருக்கு மாற்றலாகி வந்திருந்தார்.

சர்க்காரில் பெரிய உத்தியோகம் என்றவுடன், பரமேசுவரனிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டுமென்று அவா பிறந்தது ராஜாராமனுக்கு. எனவே சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல்' ராஜாராமன் எதிர்பார்க்காமலேயே அந்த வாய்ப்பு சீக்கிரத்திலேயே கிட்டிற்று. ஒரு நாள், ராஜாராமன் மாலை நாலு மணி சுமாருக்குச் சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியே கிளம்பும் போது, பரமேசுவரன் வீட்டு வராந்தாவில் ஒரு யுவதி நிற்பதைக் கண்டான். அவளைப் பார்த்த அளவில் ராஜாராமன் அயர்ந்து போனான். அவன் பிரமையைத் தவிர்ப்பவள் போல் அந்தப் பெண் அவனைத் தன் வீட்டிற்கு வரும்படி கைகளால் சைகை காட்டினாள்.

ராஜாராமனுடைய இருதயம் வெகு வேகமாக அடித்துக் கொண்டது. அவளை நிமிர்ந்து ஒரு முறை பார்த்தான். அவள் மறுபடியும் அவனை வரும்படி சைகை காண்பித்தாள். ராஜாராமனும் துணிச்சலாகச் சைக்கிளைத் திருப்பினான்.

ராஜாராமன் அவள் வீட்டை நெருங்கியவுடன் சீதாவுக்கு எங்கிருந்தோ வெட்கம் வந்து விட்டது. கூப்பிடும்போது இருந்த துணிச்சல் எங்கேயோ ஓடி ஒளிந்து கொண்டது.

''ஏன், எதற்குக் கூப்பிட்டீர்கள்?'' என்றான் ராஜாராமன்.

''ஒன்றுமில்லை. உங்களால் ஒரு காரியம் ஆக வேண்டும். என் தந்தைக்குத் திடீரென்று மயக்கம் வந்து விட்டது. வீட்டில் வேலைக்காரன்கூட இல்லை. தயவு செய்து டாக்டர் சபேசனை கொஞ்சம் அழைத்து வந்தால் உபகாரமாக இருக்கும்.'' சீதாவின் குரலில் நடுக்கம் இருந்தது. அதனுடன் கூட அடக்கமும் இருந்தது. இதை யெல்லாம் விடப் பெண் குலத்திற்கே உரிய நாணம் அவள் பேச்சில் கலந்து கரைந்திருந்தது.

டாக்டரை அழைத்து வர வேண்டும் என்றவுடன் ராஜாராமன் பதில் பேசவில்லை. 'சரி' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்துவிட்டுச் சைக்கிளை வெகு வேகமாகத் தெருவை நோக்கிச் செலுத்தினான். சீதா போன்றவர்கள் அம்மாதிரி கட்டளைகள் இட்டால் டாக்டர் சபேசனை அழைத்து வருவது மட்டுமென்ன! இது போன்ற பல காரியங்கள் எது வேண்டுமானாலும் செய்யலாமே என்று எண்ணியது அவன் உள்ளம்.

சீதாவின் தகப்பனார் பரமேசுவரனுக்கு உலகத்திலேயே ரொம்பப் பிரியமான பொருள் அவர் உடல், அதற்குப் பிறகுதான் சீதா. உலோபிகள் பணத்தைப் பதுக்கிப் பாதுகாப்பது போல அவர் தம்முடைய உடலைப் பேணிப் பாதுகாத்து வந்தார். இரண்டு மூன்று வருடங்களுக்கு முன் அவர் மனைவி இறந்த பிறகு தான் உலகத்தில் தமக்குத் தம் உடலைத் தவிர மற்ற பொறுப்புகள் இருக்கின்றன என்று அவருக்குத் தெரிந்தது. வயது வந்த தம் ஒரே பெண் சீதாவைப் பார்க்கும்போது அந்தக் கவலை பன்மடங்காகப் பரவி அவர் உடலில் நிரந்தர ஏக்கமாக அங்கம் வகிக்க ஆரம்பித்து விட்டது.

வழக்கப்படி டாக்டர் சபேசன் வந்தார். பரமேசுவரனைப் பார்வையிட்டுவிட்டு 'சாதாரண மயக்கம்தான். சற்று நேரத்தில் தெளிந்து விடும்' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

ராஜாராமனும் வீட்டுக்குப் போகலாம் என்று எழுந்தான். ஆனால் ஏனோ அவ்வாறு செய்ய அவனுக்குத் தோன்றவில்லை. பரமேசுவரனுக்குச் சற்று மயக்கம் தெளிந்தவுடன் கிளம்பலாம் என்று அங்கேயே உட்கார்ந்து விட்டான்.

''எவ்வளவு நாட்களாக உங்கள் தந்தைக்கு உடம்பு இப்படி இருக்கிறது?'' என்று ஆரம்பித்தான் ராஜாராமன் பேச்சை மெதுவாக.

''இம்மாதிரி உடல் உபத்திரவம் அவருக்கு நீண்ட நாளாகவே உண்டு. சிற்சில சமயங்களில் தான் இப்படிக் கடுமையாக இருக்கிறது. இன்று மட்டும் நீங்கள்..................'' பேசி முடிக்கவில்லை சீதா. நன்றி உணர்ச்சி அவள் முக விலாசத்தில் பரிணமித்தது.

அதற்குள் பரமேசுவரன் கண் விழித்துக் கொண்டு ''சீதா!'' என்று கூப்பிட்டார்.

''இப்பொழுது எப்படி அப்பா இருக்கிறது? நான் பயந்தே போய் விட்டேன். இவர் மட்டும் இல்லாமல் இருந்தால் அவ்வளவுதான். எனக்கு என்ன செய்வது என்றே புரியாமல் போயிருக்கும்'' என்றாள் சீதா ராஜாராமனைச் சுட்டிக்காட்டியபடி.

அதற்குள் மயக்கம் நன்றாகத் தெளிந்து விட்டது பரமேசுவரனுக்கு. எழுந்து மெதுவாகப் படுக்கையில் உட்கார்ந்து கொண்டார். ''நீங்கள்...உங்களை எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கிறது'' என்றார் ராஜாராமனைப் பார்த்துக் கொண்டே சற்று யோசித்தபடி.

''நான் உங்கள் வீட்டிற்கு எதிரேதான் இருக்கிறேன். ஏதோ சமயத்துக்கு வந்து உதவ முடிந்தது. சரி, நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்,

"நான் பிறகு வந்து பார்க்கிறேன்" என்று விடை பெற்றுக் கொண்டான் ராஜாராமன்.

பரமேசுவரனுக்கும் ராஜாராமனுக்கும் இப்படித் தொடர்பு ஆரம்பமாயிற்று. நாளா வட்டத்தில் இது அதிகமாகவே சீதாவை அவன் அடிக்கடி சந்திக்கவும் அளவளாவவும் முடிந்தது. சீதாவின் நீண்ட கூந்தலும், பூர்ண சந்திரனை பொருந்த முகமும், கயல் விழிகளும், அன்ன நடையும் ராஜாராமனின் உள்ளத்தை வெகுவாகக் கொள்ளை கொண்டு விட்டன.

பரமேசுவரனுக்கும் ராஜாராமனைப் பிடித்திருந்தது. அவனுடைய அடக்கமான சுபாவமும், மரியாதையுள்ள நடத்தையும் அவரைக் கவர்ந்திருந்தன. எனவே தம் மகள் அவனோடு பழகுவதை அவர் ஆட்சேபிக்கவில்லை. எல்லாம் கூடி வந்தால் அவனுக்கே சீதாவைக் கல்யாணம் செய்து கொடுத்துத் தம்முடன் வைத்துக்கொள்ள விரும்பினார்.

பரமேசுவரன் அத்துடன் நின்று விடவில்லை. தன் ஏற்பாட்டில் சீதாவுக்குத் திருப்தி இருக்கிறதா இல்லையா என்பதைக் கண்டறிய ஒருநாள் ஏதேதோ பேச்சுக்கு இடையில் ஒரு யுக்தியைக் கையாண்டார்.

"நான் ஒரு யோசனை வைத்திருக்கிறேன், சீதா! என்னுடைய ஒன்றுவிட்ட அத்தைக்கு......" பேச்சை முடிக்காமலேயே சீதாவைக் கவனித்தார்.

அப்பப்ப! அவள் முகத்தில் தோன்றிய திடீர் மாறுதல்! கண்களுக்கும் நெற்றிக்கும் பேசும் சக்தி மட்டும் இருந்திருந்தால் பேசிக் கொட்டியிருக்கும்!

பரமேசுவரன் விஷயத்தைப் புரிந்து கொண்டார். உடனே பேச்சைத் திருப்பினார். "......ஒன்றுவிட்ட அத்தை பிள்ளைக்கு உன்னைக் கொடுக்கலாம் என்றுதான் இருந்தேன். ஆனாலும் எனக்கு இஷ்டமில்லை. ஏன் சீதா! ராஜாராமனை உனக்கு......" பரமேசுவரன் யோசனை செய்வதைப் போல் பாவனை செய்தார்.

தாமரை மலர்வதுபோல் மலர்ந்தது சீதாவின் முகம். உள்ளக் களிப்பில், மனம் அடைந்த பூரிப்பில் அவள் சரீரமே நிறைவு அடைந்தது.

அதற்குப் பிறகு பரமேசுவரன் சும்மா இருக்கவில்லை. ராஜாராமனுடைய சம்மதத்தையும், அவனுடைய தாயார் சம்மதத்தையும் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஒரு நல்ல நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

இதற்கிடையில் ஒருநாள் தனிமையில் வீணை வாசித்துக் கொண்டிருந்த சீதாவைச் சந்திக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது ராஜாராமனுக்கு.

ராஜாராமனைக் கண்ட சீதா வீணையைக் கீழே வைத்துவிட்டு 'வாருங்கள், வாருங்கள்' என்று பரிவுடன் உபசரித்தாள்.

அன்றையதினம் சீதாவும் ராஜாராமனும் எவ்வளவோ விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். ஒருவர் மனத்தை ஒருவர் திறந்து காட்ட வெகுவாகப் பிரயத்தனப் பட்டார்கள். ராஜாராமன் சொன்னான்: "சீதா, எனக்கோ காலேஜ் படிப்பு முடிந்து விட்டது. இன்னும் இரண்டொரு நாளில் எங்கேயாவது உத்தியோகம் ஆகிவிடும். அப்புறம்......" சொல்லத் தயங்கினான் அவன். அதற்குள் சீதா "அப்புறம் நாமிருவரும் சந்திக்க முடியாது என்கிறீர்கள் அவ்வளவுதானே!" என்றாள்.

"அது இல்லை சீதா! நம் கல்யாண விஷயத்தைப் பற்றி உன் அபிப்பிராயத்தை என்னிடம் சொல்லவே இல்லையே!"

சீதாவின் எண்ணச் சுழல்கள் வேகமாகச் சுழன்றன. என்ன பதில் கூறுவது என்று யோசனை செய்தாள். "இணைந்து ஜலத்தை வெள்ளமா கொண்டு போகும்! என் உள்ளம் உங்களுக்குத் தெரியாதா! என் தந்தை என் விருப்பப்படி நடப்பதாகச் சொல்லி யிருக்கிறார்" என்றாள்.

ராஜாராமனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. சந்தோஷம் தாங்கவில்லை.

இந்த நிலையில்தான் அவன் மனுச் செய்து கொண்டிருந்த 'கவர்ன்மென்ட்' உத்தியோகத்திற்கு மனுப் போட்ட நான்காம் நாளே அவனுக்கு 'ஆர்டர்' வந்தது. வடக்கே ராஜபுதனத்துக்கு அருகேயுள்ள ஒரு ஊரில் 'கெஜட்' பதவியில் உள்ள ஒரு வேலையை ஏற்கும்படி அது கூறியது. ராஜாராமனும், அவன் தாயாரும் அடைந்த வியப்பிற்கு அளவே இல்லை. எடுத்த எடுப்பில் பெரிய வேலை கிடைக்குமென்று அவன் எதிர்பார்க்கவில்லை. இந்தச் சந்தோஷ சமாசாரத்தைச் சீதாவுக்கும் பரமேசுவரனுக்கும் தெரிவித்தால் அவர்கள் எவ்வளவு ஆனந்தமடைவார்கள் என்று 'ஆர்டரை' எடுத்துக் கொண்டு அவர்களிடம் ஓடினான்.

ஆனால் என்ன ஏமாற்றம்! அவன் நினைத்ததற்கு மாறாக எல்லாம் நடந்தது. ராஜபுதனத்தில் வேலை என்றவுடன் 'சப்'பென்று போய் விட்டது பரமேசுவரனுக்கு.

"ராஜாராம், இந்த வேலையை ஒப்புக் கொள்வது என்று தீர்மானித்து விட்டாயா?" என்றார் பரமேசுவரன்.

"ஆமாம். ஏன் அப்படி கேட்கிறீர்கள்?" என்றான் ராஜாராமன்.

பரமேசுவரன், "ராஜாராமா! நீ இந்த வேலையை ஒப்புக் கொண்டு ராஜபுதனம் போகத் தீர்மானித்து விட்டால், என் சீதாவை மறந்துவிட வேண்டியதுதான். என் கனவுகள்



எல்லாம் அவனை உனக்குக் கல்யாணம் செய்து கொடுத்து என் பக்கத்திலேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்பது. ஆனால் நீயோ பெரிய உத்தியோகம் என்ற மோகத்தில் வடக்கே செல்ல வேண்டும் என்கிறாய். என் மகளைப் பிரிந்து என்னால் இருக்க முடியுமா! இப்போது இருக்கும் என் உடல் நிலையில் கானும் பாலைவனப் பிரதேசமான ராஜபுதனம் வந்தால் அவ்வளவுதான்......!" என்றார்.

ஆயிரம் தேள்கள் கொட்டுவதுபோல் இருந்தது ராஜாராமனுக்கு. குப்பென்று உடம்பு வியர்த்தது.

பரமேசுவரனுக்கும், ராஜாராமனுக்கும் பிறகு எவ்வளவோ வாக்கு வாதம் நடந்தது. கடைசியில் ராஜாராமனே தோல்வி யடைந்தான். தோல்விக்குச் சிகரம் வைத்தது போல் அமைந்தது, சீதா கடைசியில் பேசின வார்த்தைகள்.

"எனக்கு என் தந்தைதானே சகலமும்! அவர் விருப்பம் பங்களூரை விட்டு வரமுடியாதென்றால் நான் என்ன செய்ய முடியும்! தாங்களே எனக்காக அந்த உத்தியோகத்தை விட்டு விட்டுப் பங்களூரிலேயே ஒரு நல்ல உத்தியோகம் பார்த்துக் கொண்டால் சௌகரியம்..." அவளுக்குத் தொண்டையை அடைத்தது; பேச்சை அவ்வளவோடு நிறுத்திக் கொண்டு விட்டாள்.

அதற்குப் பிறகு அங்கு நிற்க வில்லை ராஜாராமன். 'விடு விடு' என்று வீட்டுக்கு வந்து விட்டான். இந்த மன நிலையில் தன் அறையில் உட்கார்ந்திருந்த போதுதான் சிந்தனை அவன் மனத்தைக் குழப்பிற்று.

ராஜாராமன், பரமேசுவரன் வீட்டில் நடந்த விஷயங்களை யெல்லாம் தன் அம்மாளிடம் சொல்லவே யில்லை. அவனுக்குப் பெரிய உத்தியோகம் ஆகியிருக்கிறது என்ற தகவல் தெரிந்தவுடனேயே அவள் எல்லாக் கஷ்டங்களையும் மறந்திருந்தாள். அந்த மன நிலையில் பரமேசுவரன் வீட்டில் நடந்தவைகளை யெல்லாம் எதற்காகப் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று சும்மாயிருந்து விட்டான்.



சீதா தன்னுடைய தந்தையின் உடல் நிலையைக் கருதி ராஜபுதனம் வரத் துணியாதபோது தான் மட்டும் தன் தாயின் விருப்பத்தை நிறைவேற்றாமல் ஏன் உத்தியோகத்தை நிராகரிக்க வேண்டும் என்று அவன் எண்ணினான். இந்த யோசனை தோன்றி வலுப்பெற்றபோது அவன் சீதாவை மறந்து விட்டான் என்று கூடச் சொல்லலாம்.

இவைகள் எல்லாம் நடந்த மறு வாரமே ராஜாராமனும் அவன் தாயாரும் ராஜபுதனம் கிளம்பி விட்டார்கள். ஊருக்குப் போகும்போது பரமேசுவரனிடம் சொல்லிக் கொள்ள வந்தான் அவன்.

"ஸார்!" என்னைத் தாங்கள் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அடிக்கடி கடிதம் போடுங்கள்" என்றான்.

சீதா கதவோரத்தில் பதுமை போல் நின்று கொண்டிருந்தாள். கண்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. ராஜாராமன் அவள் பக்கம் வந்து, "சீதா! போய் வருகிறேன் உன் அப்பாவின் உடம்பைப் பார்த்துக் கொள்" என்று சொல்லி விட்டுப் போனான்.

சீதாவின் தலையில் யாரோ சம்மட்டி கொண்டு அடிப்பது போல் இருந்தது. தந்தையின் உடல் நிலை, ராஜாராமனின் பிரிவு ஆகிய இரண்டு விஷயங்களும் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தன அவள் உள்ளத்தில். துக்கத்தை அடக்க முயன்றும் அது முடியாமல் போய் விட்டது.

ராஜாராமன் ராஜபுதனம் வந்த இரண்டொரு மாதங்கள் வரை தவறாமல் பரமேசுவரனுக்குக் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தான். பிறகு அதுவும் நின்றுவிட்டது. மாதங்களும் வருஷங்களும் ஓடி மறையவே சீதாவைப் பற்றின தகவலே அவனுக்குத் தெரியவில்லை.

ராஜபுதனம் வந்து ஐந்தாறு வருடங்கள் ஆகிவிடவே தன்னைத் தென்னாட்டிற்கு மாற்றி விடும்படி ராஜாராமன் அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொண்டிருந்தான். பல தடவைகள் இவன் விண்ணப்பங்களை நிராகரித்த அவர்கள் கடைசியில் மாற்றுவதாக ஒப்புக் கொண்டார்கள். ராஜாராமன் இடத்திற்கு வேறொருவர் வந்தவுடன் அவனை மாற்றுவதாகத் தெரிவித்திருந்தனர். ராஜாராமனும் இதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மாற்றலான உடனேயே 'லீவ்' எடுத்துக் கொண்டு பரமேசுவரனையும் சீதாவையும் போய்ப் பார்க்கவேண்டும் என்று திட்டம் போட்டுக் கொண்டான்.

கடைசியில் ஒருநாள் ராஜாராமன் இடத்திற்கு வரவேண்டிய பேர்வழி வந்து சேர்ந்தார். ரயிலிலிருந்து இறங்கிய உடனேயே நேராகத் தன் பேரைச் சொல்லிக்கொண்டு ராஜாராமன் வீட்டிற்கு வந்தார் அவர்.

"நீங்கள்தானே மிஸ்டர் ராஜாராமன்! நான் ராமகிருஷ்ணன். உங்களை 'ரிலீவ்' செய்ய வந்திருக்கிறேன்" என்றான் ராமகிருஷ்ணன், காலை தினசரிப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்த ராஜாராமனைப் பார்த்து.

"வாருங்கள், வாருங்கள், மிஸ்டர் ராமகிருஷ்ணன்! உங்கள் வரவைத்தான் மிகவும் ஆவலோடு

எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். உட்காருங்கள்!" என்றான் ராஜாராமன் மகிழ்ச்சி பொங்க.

"நான் வருவதோடு அல்லாமல் என் மனைவியையும் அவள் தந்தையையும் வேறு அழைத்து வந்திருக்கிறேன். அவர்கள் மூசாபர் பங்களாவில் தங்கியிருக்கிறார்கள். உங்கள் வீட்டைத்தான் வாடகைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்றிருக்கிறேன்."

"தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள். அவர்கள் மட்டும் ஏன் அங்கே இருக்கவேண்டும்! நம்ம வீட்டிலேயே இருந்தால் போகிறது! அவர்களையும் அழைத்து வாருங்கள்" என்றான்.

சிறிது நேரத்தில் ராமகிருஷ்ணனின் மனைவியும், அவள் தந்தையும் வந்தபோது ராஜாராமனால் அவன் கண்களை நம்ப முடியவே இல்லை. அவர்கள் சாட்சாத் சீதாவும் பரமேசுவரனும் தான். அடாடா! பரமேசுவரன் தான் எப்படி மாறி விட்டார்!

பரமேசுவரனும் சீதாவும் ராஜாராமனைப் பார்த்தவுடன் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டார்கள். சீதாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. கண்களில் 'மளமள' வென்று கண்ணீர் வந்துவிட்டது.

"ராஜாராம்! உன்னை வேதனைக்கு உள்ளாக்கிய என் கதியைப் பார்! என்னையும் விதி இங்கு கொண்டுவந்துதானே சேர்த்தது! நான் கனவிலும் நினைக்காத விஷயம் நடந்துவிட்டது பார்த்தாயா! ராமகிருஷ்ணனிடம் எவ்வளவோ சொன்னேன். பிடிவாதமாகச் சீதாவையும் அழைத்துப் போக வேண்டும் என்றான். எனக்கு மட்டும் அங்கு என்ன வேலை! அவனோடு கிளம்பி விட்டேன். எல்லாம் தெய்வ சோதனையாக இருக்கிறது" என்று புலம்பினார் பரமேசுவரன். அவர் கண்களைக் கண்ணீர் மறைத்தது. நா தழுதழுத்தது.

"எல்லாம் நம் இஷ்டப்படியா நடக்கிறது! வாருங்கள், மேற் கொண்டு நடக்க வேண்டியதைப் பார்க்கலாம்" என்று ராஜாராமன் சமாதானம் சொன்னான்.

ராமகிருஷ்ணனுக்கோ ஒன்றும் புரியவில்லை. பேசாமல் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

ராஜாராமன் வீட்டில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தார்கள், பரமேசுவரனும் சீதாவும். அந்த இரண்டு நாட்களிலும் பரமேசுவரன் பட்ட அவஸ்தை கொஞ்ச நஞ்சமல்ல. அடிக்கடி மயக்கம் வந்து சுருண்டு சுருண்டு விழுந்தார். வெய்யிலின் உக்கிரத்தைத் தாங்கமுடியாமல் அவர் தேகம் பாதித்தது. வயது வந்த காலத்தில் தனக்கேற்பட்ட துர்பாக்கிய நிலையைக் குறித்து மனம் புழுங்கினார்.

சீதாவின் உடல் நிலை வேறுகோளாறு கண்டது. பங்களூரில் சௌக்கியமா யிருந்து பழகிப் போன அவள் தேகம் ராஜபுதன வாழ்வை ஏற்க மறுத்தது. இந்த நிலையில் அவள் கருத் தரித்திருந்தாள்.

தந்தையும் மகளும் கஷ்டப்படுவது அவனுக்கு மன வேதனையைத் தந்தது. ஒரு நாள் உருக்கமாகச் சீதா, "பார்த்தீர்களா, என் தந்தை படும் அவஸ்தையை! என் சௌக்கியம் பிறகு இருக்கட்டும். நீங்கள் மட்டும் பங்களூருக்குப் போங்கள் என்றால் கேட்க மாட்டேன் என்று சொல்கிறார். என் மேல் அவருக்குள்ள பாசத்தால்தான் அவர் இங்கு இருந்து கஷ்டப்படுகிறார். பெண் ஜன்மம் எடுத்த நான் என்ன செய்வேன்!" என்று ராஜாராமனிடம் சொன்னாள்.

"சீதா! நம்மிருவரையும் பிரித்தது இந்த ராஜபுதனம் தான். இன்று ஒருவரை யொருவர் பார்ப்பதற்கு ஏதுவாக அமைந்ததும் இதுதான். நீ படும் துன்பம் எனக்குத் தெரியாதா! உன் சுகம் தானே என் சுகமும்' என்னால் ஆனதைச் செய்து கொண்டிருக்கிறேன். முடிவு நாளை தெரிந்து விடும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான் ராஜாராமன்.

சீதாவுக்கு ஒன்றும் புரியவில்லை. 'ராஜாராமன் எந்த முடிவைப் பற்றிச் சொல்கிறார்' என்று ஆலோசனை செய்ய ஆரம்பித்தாள்.

மறுநாள் ராஜாராமன் ஆபீஸிலிருந்து வெகு குதூகலமாக வீடு திரும்பி வந்தான். வீடு வந்தவுடன் முதற் காரியமாகப் பரமேசுவரனிடம் சென்று, "ஸார், இனி நீங்கள் ராஜபுதனத்தில் இருக்க வேண்டாம். உங்கள் மாப்பிள்ளைக்கு மறுபடியும் பெங்களூருக்கே மாற்றலாகி விட்டது. இன்றுதான் ஆர்டர் வந்தது" என்றான்.

பரமேசுவரன் ஆச்சரியத்துடன் "அப்படியானால் உனக்கு எந்த ஊர்!" என்றார்.

"நான் இங்கேயேதான் இருக்க வேண்டும். என்னைத்தான் முதலில் பங்களூருக்குப் போகச் சொன்னார்கள். எனக்கு இப்போது சௌகரியமில்லை என்று வாதாடி உங்கள் மாப்பிள்ளைக்கே அந்த உத்தரவைப் பிறப்பிக்கும்படி சொல்லி விட்டேன்" என்றான் ராஜா ராமன். அவன் பேச்சில் வெற்றியின் பெருமிதம் தோன்றிற்று.

"ராஜாராமா, உனக்கு எப்படி நன்றி கூறுவது என்றே தெரியவில்லை. நானும் சீதாவும் உனக்கு என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறோம்" என்றார் பரமேசுவரன்.

"அண்ணா, தாங்கள் ஒரு தியாக புருஷர்...... உங்கள் சுகத்தைக் கொஞ்சங்கூடக் கருதாமல் எங்களுக்காக எவ்வளவு கடுமையான சிரமத்தை ஏற்கத் தயாராக இருக்கிறீர்கள்!" என்றாள் சீதா. அவள் முகம் துக்கத்தால் வீங்கிச் சிவந்திருந்தது.

"சீதா! இது எனக்கு ஒரு கஷ்டமா! உனக்காக நான் படும் இஷ்டம் என்றுதான் இதைக் கருதுவேன். நம்மிருவருக்கும் உள்ள பரஸ்பர அன்பு காரணமாக நான் எது வேண்டுமானாலும் செய்வேன்" என்றான் ராஜாராமன்.



"நமது ச்சாமு எந்த வேலைக்குப் போனாலும் முன்னுக்கு வரக்கூடியவன் என்று தான் சொல்லுவேனல்லவா?"

"ஆமாம், நீ சொன்னது சரியாய்ப் போய் விட்டதா?"

"ஆமாம், அவன் பஸ்ஸில் கண்டக்டராக வேலைக்குப் போனான். இப்போது டிரைவராகி விட்டான்!"

# இந்த உபகண்டத்தில் நாலுபேரில் ஒருவர் மலேரியாவினால் பீடிக்கப்படுகிறார்கள்

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். எண்ணிக்கையில் சொல்லப் போனால் ஒவ்வொரு வருடமும் கிட்டத்தட்ட பத்துகோடி ஜனங்கள் மலேரியாவினால் வருந்துகிறார்கள்.

அலட்சியம் செய்யாதீர்கள்—மலேரியா ஜனங்களை பலஹீனப் படுத்தி, வீழ்த்தக்கூடிய ஓர் கொடிய நோய். அது ஆரோக்யத்தையும், சக்தியையும் அழித்து, உற்சாகத்தையும் அறிவையும் மழுங்கச் செய்து விடுகிறது.

ஆதலால் தான் நீங்கள் இன்றே மலேரியாவிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'பாலுட்ரின்' உட்கொள்ளும்படி நாங்கள் வற்புறுத்துகிறோம். 'பாலுட்ரின்' உட்கொள்ளுவதற்கு அபாயமற்றது, சுலபமானது, மலிவானது, மலேரியாவைத் தடுக்கத் தகுதியானது. உங்களை காப்பாற்றிக் கொள்ளுவதற்கு சிறந்த வழி ஒரே அணா விலையுள்ள ஒரு 'பாலுட்ரின்' மாத்திரையை பிரதிவாரமும் ஒரு முறை சாப்பிடுவதுதான். அளவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இரவில் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை

சிகிச்சைக்கு: வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை விதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

பாதுகாப்பிற்கு: மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.







எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 73





# மாங்கல்யப் பிச்சை

ஸ்ரீ சுதன்

காலை ஒன்பது மணி யிருக்கும். ராமாமிர்தம் அவனுடைய அறையிலிருந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்த வண்ணம் அன்றைய செய்திப் பத்திரிகையை வாசித்துக் கொண்டிருந்தான். அவன் மனைவி கமலா சமையற்கட்டில் பகல் சாப்பாட்டைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தாள். 'அக்கா' என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் கமலா. அவளை அவ்விதம் அழைத்தவள் அடுத்த வீட்டின் பின் பகுதியில் குடியிருந்த பார்த்தசாரதியின் பெண் பங்கஜம். தன் கையில் கொண்டு வந்திருந்த கடிதம் ஒன்றைப் பங்கஜம் கமலாவிடம் கொடுத்து, "இதைத் தவறுதலாகத் தபால்காரன் எங்களுடைய கடிதங்களுடன் சேர்த்துக் கொடுத்து விட்டான். இந்தக் கடிதம் உங்கள் பெயருக்கு வந்திருக்கிறது" என்று கூறி விட்டுச் சென்றாள்.

கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாள் கமலா. திருச்சி அருகிலுள்ள கிராமத்திலிருந்து ராமாமிர்தத்தின் தமக்கை காமாட்சிதான் அந்தக் கடிதத்தை எழுதி யிருந்தாள்.

"சௌபாக்கியவதி கமலாவுக்கு,

காமாட்சி ஆசீர்வாதம். வழக்கம் போல் இந்த வருஷமும் சிரஞ்சீவி ராமாமிர்தத்துக்கு அவனுடைய கம்பெனியில் 'போனஸ்' பணம் கொடுப்பார்கள் என்று நினைக்கிறேன். ஒரு மாதத்துக்கு முன் ராமாமிர்தம் எனக்கு எழுதியிருந்த கடிதத்தில் அவன் ஒரு வேலை ஆபீஸ் அலுவல் நிமித்தமாகப் பம்பாயிலிருந்து வெளியூர்களுக்குப் போய் வர வேண்டியிருக்கும் என்று குறிப்பிட்டிருந்தான். அதனால் தான் இந்தக் கடிதத்தை உனக்கு எழுதி யிருக்கிறேன். ராமாமிர்தத்தின் அத்திம்பேருக்கு இப்போது டாக்டர் ஒரு புதுவித மருந்து கொடுத்துக் கொண்டு வருகிறார். அதனால் நல்ல பலன் இருக்கிறதென்றும் அந்த மருந்தைத் தொடர்ந்து இரண்டு மாதங்களாவது உபயோகிக்க வேண்டுமென்றும் அபிப்பிராயப்படுகிறார். இதற்குக் குறைந்தது இன்னும் நானூறு ரூபாயாவது செலவாகும் என்று தெரிகிறது. ஆகையால் ராமாமிர்தத்திற்குப் போனஸ் கிடைத்ததும் மறந்து போகாமல் எனக்கு அந்தப் பணத்தை அனுப்பி வைக்கும்படி நீ தயவு செய்து அவனிடம் ஞாபகமாகத் தெரிவிக்க வேண்டும். இவ்வளவு காலமாக நீயும் ராமாமிர்தமும் மன ஒற்றுமையுடன் எனக்கு அளித்த உதவி பெரிதல்ல; உண்மையைச் சொல்லப் போனால் நான் இப்போது உங்களிடமிருந்து எதிர்பார்க்கும் உதவியை நீங்கள் எனக்குச் செய்வது எனக்கு மாங்கல்யப் பிச்சை அளிப்பதற்கு ஒப்பாகும். உங்கள் இருவருக்கும் என்னுடைய ஆசீர்வாதம்.

காமாட்சி."

கடிதத்தைப் படித்து முடித்ததும் "சரி, இத்தனை நாளாகத் தம்பிக்குக் கடிதம் எழுதியது போதாதென்று காமாட்சி எனக்கே கடிதம் எழுத ஆரம்பித்துவிட்டாள். அவளுடைய கணவருக்கு வந்திருக்கும் வியாதி ஐந்து வருஷங்களாகச் சிகிச்சை செய்தும் குணமடைந்ததாகத் தெரியவில்லை. ஒவ்வொரு வருஷமும் என் கணவருக்குவரும் போனஸ் பணமும் மாதா மாதம் மீதம் வைக்கக் கூடிய தொகையும் சேர்ந்து டாக்டருக்கும் மருந்துக் கடைக்கும் போனதுதான் பலன். இலகுவில் குணமடையக் கூடாத வியாதிக்கு மேலும்மேலும் சிகிச்சைக்காக பணம் செலவழிக்கலாமா! அதற்கும் ஒரு எல்லை கிடையாதா, என்ன! நான் இந்தத் தடவை போனஸ் பணத்தில் எனக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக் கொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். அதற்காக அந்தப் பணத்திலிருந்து ஒரு பகுதியைத் தனியாக ஒதுக்கி வைக்கும்படி என் கணவரிடம் கேட்டுக் கொள்ளப் போகிறேன். இந்தக் கடிதம் வந்ததாக அவரிடம் நான் தெரிவிக்கப் போவதில்லை" — இவ்வாறு எண்ணினாள் கமலா.

அதே சமயத்தில் ராமாமிர்தம் அவளிடம் தெரிவித்திருந்த அவனுடைய வாழ்க்கையை ஒட்டிய தகவல்களும் அதை அடுத்து நிகழ்ந்த சம்பவங்களும் அவள் அகக்கண் முன் தோன்றின.

காமாட்சியின் கணவர் பாலகிருஷ்ணன் பத்து வருஷங்களுக்கு முன் நல்ல சம்பளத்தில் சென்னையில் உத்தியோகமாக இருந்தார். அப்பொழுது எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டு மேலே படிக்கப் போக வேண்டுமென்ற ஆர்வத்துடனிருந்தான் ராமாமிர்தம். ஆனால் சிறு வயதிலிருந்து பெற்றோர்களை இழந்த அவனைப் பராமரித்து வந்த அவனுடைய சித்தப்பாவுக்கு அவனுடைய மேல் படிப்புக்காகப் பணம் செலவழிக்கச் சக்தியுமில்லை; அதற்கு வேறு ஏற்பாடு செய்வதற்கு இஷ்டமு

யில்லை. ஏதாவது ஒரு சிறிய உத்தியோகத்தில் ராமாமிர்தத்தை அமர்த்தி வைப்பதற்குப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தார் அவனுடைய சித்தப்பா. தன் சித்தப்பாவின் எண்ணத்தையும் ராமாமிர்தம் தீவிரமாக யோசனை செய்தான். பிறகு தான் மேலே படிக்க வேண்டும் என்ற தன்னுடைய விருப்பத்தையும் தெரிவித்துச் சென்னையிலிருந்த அவனுடைய தமக்கை காமாட்சிக்குக் கடிதம் எழுதினான்.

காமாட்சி தன் கணவன் பாலகிருஷ்ணனிடம் தன் தம்பி ராமாமிர்தத்தின் அபிலாஷையைத் தெரிவித்தாள். சுபாவமாகவே பரந்த நோக்கமுடைய பாலகிருஷ்ணன் காமாட்சியிடம் அவன் தம்பியைச் சென்னைக்கு வரும்படி எழுதச் சொன்னார். ராமாமிர்தம் சென்னைக்கு வந்ததும் அவனைக் காலேஜில் சேர்த்தார். பாலகிருஷ்ணன் ராமாமிர்தத்தின் படிப்புச் செலவுக்காகத் தம்முடைய சௌகரியங்களில் சிலவற்றைக் குறைத்துக் கொண்டார். ராமாமிர்தமும் தன்னுடைய குடும் நிலையைத் தெரிந்து கொண்டு படிப்பில் கவனம் செலுத்தி பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினான். அதை அடுத்துப் பாலகிருஷ்ணன் தமக்குத் தெரிந்த ஒரு நெருங்கிய நண்பரின் சிபாரிசின் பேரில் ராமாமிர்தத்தைப் பம்பாயில் ஒரு தொழிற்சாலையில் நூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் ஒரு உத்தியோகத்தில் அமர்த்தி வைத்தார். வேலை நிரந்தரமானதும் ராமாமிர்தம் கமலாவைக் கலியாணம் செய்து கொண்டான். கமலாவைத் தேர்ந்தெடுத்து ராமாமிர்தத்துக்கு விவாகம் செய்து வைத்ததும் பாலகிருஷ்ணன்தான்.

கலியாணத்துக்குப் பின் கமலாவும் ராமாமிர்தமும் குடித்தனம் நடத்தத் தொடங்கியதும் அடிக்கடி ராமாமிர்தம் கமலாவிடம் அவர்கள் அப்பொழுது இருக்கும் நல்ல நிலைமைக்குக் காரணம் அவனுடைய தமக்கை காமாட்சியும் அவள் கணவர் பாலகிருஷ்ணனும் தான் என்று கூறிச் சந்தோஷப்படுவதுண்டு.

இந்தச் சமயத்தில்தான் ஒரு நாள் ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும் ராமாமிர்தம் கமலாவிடம், "கமலா! நமக்குப் போதாத காலம் ஆரம்பமாகி விட்டது" என்றான் கலவரமடைந்த குரலில். அதைத் தொடர்ந்து அவன் கூறிய தகவல் காமாட்சியைத் தூக்கி வாரிப் போடச் செய்தது. காமாட்சியின் கணவருக்கு க்ஷயரோகம் கண்டிருப்பதாகவும், அவர் அதன் காரணமாக உத்தியோகத்தை விட்டுவிட்டுக் காமாட்சியுடன் திருச்சிக்கு அருகில் உள்ள தம்முடைய கிராமத்துக்குப் புறப்பட்டுப் போய் விட்டதாகவும் அறிவித்தான். அதைக் கேட்டதும் கமலா அடைந்த துயரத்துக்கு அளவில்லை.

பூர்வீகச் சொத்து அதிகம் இல்லாத பாலகிருஷ்ணனின் பொருளாதார நிலைமையை நன்கு அறிந்திருந்த காரணத்தால் தன்னாலான உதவியைச் செய்ய எண்ணி மாதந்தோறும் காமாட்சிக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அனுப்பிக் கொண்டிருந்தான் ராமாமிர்தம். இது போதாதென்று காமாட்சியின் வேண்டுகோளின் பேரில் ஒவ்வொரு வருஷமும் தனக்குக் கிடைக்கும் 'போனஸ்' பணத்தையும் அனுப்பிக் கொண்டிருந்தான் ராமாமிர்தம்.

இந்த வருஷமாவது போனஸ் பணத்திலிருந்து ஒரு பகுதியை அனுப்பும்படி காமாட்சி கேட்க மாட்டாள் என்று எண்ணியிருந்த கமலாவுக்குக் காமாட்சியின் கடிதம் ஏமாற்றத்தையும் எரிச்சலையும் கொடுத்தது. வந்த கடிதத்தை மடித்துப் பெட்டியில் கொண்டு போய் வைத்துவிட்டு 'என்ன இருந்தாலும் காமாட்சிக்குப் புத்திக் கூர்மை அதிகம். ஒரு வேளை அவள் கேட்டிருக்கும் பணத்தை அவருடைய தம்பி அனுப்புவதற்கு நான் தடையாக இருப்பேனோ என்று எண்ணி மாங்கல்யப் பிச்சை அளிக்க வேண்டும் என்று எழுதியிருக்கிறாள். இதனால் எல்லாம் என்னுடைய மனம் மாறிவிடுமா! போனஸ் பணம் அவளுக்குப் போகும்படி நான் விட்டு விடுவேனா!' என்று மூணு மூணுத்த வண்ணம் சமையலறைக்குத் திரும்பினாள் கமலா.

இதற்குள் ராமாமிர்தம் ஆபீசுக்குப் புறப்படும் நேரம் நெருங்கவே அவனுக்குச் சாப்பாட்டைத் தயாராக எடுத்து வைத்து அவன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் கமலா. அதை யடுத்து ராமாமிர்தம் இலையின் முன் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்ததும் கமலா அவனிடம், "இன்று சனிக்கிழமைதானே! இரண்டு மணிக்கே ஆபீஸிலிருந்து திரும்பி வந்து விடுவீர்களல்லவா!" என்று கேட்டாள்.

"அப்படிச் சொல்லுவதற்கில்லை, கமலா! எங்கள் ஆபீஸ் மானேஜர் புனாவுக்குக் 'காம்ப்' போயிருக்கிறார். ஒருவேளை ஆபீஸ் மூடுவதற்குள் திரும்பினாலும் திரும்பி விடுவார். அப்படியானால் அவர் வந்ததும் அநேகமாக இன்றைக்கே ஆபீஸ் சிப்பந்திகளுக்கும் தொழிற்சாலை வேலையாட்களுக்கும் 'போனஸ்' பட்டுவாடாச் செய்யும்படி 'ஆர்டர்' போட்டாலும் போடலாம். 'போனஸ்' கொடுக்கும்படி உத்தரவானால் அது கொடுத்து முடியும் வரை நான் ஆபீஸிலேயே தங்கவேண்டியிருக்கும்.



அதனால் நான் எப்பொழுது இங்கே திரும்பி வர முடியும் என்று நிச்சயமாகக் கூற முடியாது. எதற்கும் நீ எனக்கு டிபனைக் கட்டிக் கொடுத்து விடு. அப்படியே 'டிபன்' வைக்கும் பையில் ஞாபகமாக நம்முடைய ரேஷன் கார்டையும் வைத்து விடு. வரும்போது கோதுமை கிடைத்தால் வாங்கி வருகிறேன்" என்றான் ராமாமிர்தம்.

சாப்பிட்டு முடிந்ததும் ஆபீசுக்குப் புறப்படத் தயாரானான் ராமாமிர்தம். கமலா, டிபனையும் ரேஷன் கார்டையும் வைத்திருந்த பையை ராமாமிர்தத்தினிடம் எடுத்துக் கொடுத்தவாறே "இந்த வருஷமாவது போனஸ் பணம் வந்ததும் நீங்கள் ரொம்ப நாளாக வாங்கித் தருவதாகச் சொல்லிக் கொண்டிருந்த மூன்று கல் வைர பேசரியை வாங்கிக் கொடுப்பீர்கள் அல்லவா!" என்று கேட்டாள்.

"அதற்கென்ன, கமலா! காமாட்சி அக்காவிடமிருந்து இந்த வருஷ போனஸ் தொகையிலிருந்து பணம் அனுப்ப வேண்டாமென்று கடிதம் வந்து விட்டால் 'போனஸ்' முழுவதையுமே உன் இஷ்டம்போல் செலவழித்துக் கொள்வதில் எனக்கு ஆட்சேபணை இல்லை" என்று பதிலளித்து விட்டுக் கிளம்பினான் ராமாமிர்தம். அவன் போன திக்கையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, "நல்ல காமாட்சி அக்கா! அவருக்கு ஏற்ற நல்ல தம்பி இவர்!" என்று கூறிப் பெருமூச்செறிந்தாள் கமலா.

பிற்பகல் மணி நான்கு இருக்கும். ராமாமிர்தம் அதுவரை திரும்பி வராததால், அநேகமாகப் போனஸ் பணம் வாங்கிக் கொண்டுதான் வீடு



திரும்புவான் என்று நினைத்தாள் கமலா. அவன் வந்ததும் அவனுடன் நகைக் கடைக்குச் சென்று தனக்குப் பிரியமான மூன்றுகல் வைர பேசரியை வாங்கிக் கொண்டு வரவேண்டுமென்று தீர்மானித்து முகத்தைக் கழுவித் தலையை வாரி, நெற்றியில் திலகமிட்டுக் கொண்டு, ராமாமிர்தத்தின் வரவை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் கமலா. ஆனால் சில நிமிஷங்களுக்கெல்லாம் அவள் வீட்டைத் தேடி வந்த சேவகன் சொன்ன செய்தி அவள் ஆவலைக் குலைத்துவிட்டது.

"நான் ஜே. ஜே. ஆஸ்பத்திரி சிப்பந்தி. உங்களிடம் நான் இப்போது கொடுத்த பையின் சொந்தக்காரர் விபத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டார். அவர் ஏறி வந்த பஸ் ஒரு லாரியில் மோதி குடை சாய்ந்து விட்டது. பஸ்ஸில் இருந்த பிரயாணிகளில் நன்றாகக் காயம்பட்டவர்களில் இவரும் ஒருவர். அவர் அருகில் இருந்த இந்தப் பையிலுள்ள ரேஷன் கார்டிலிருந்து அவருடைய விலாசத்தை அறிய முடிந்தது. சிகிச்சைக்காக அவரை எங்கள் ஆஸ்பத்திரியில் அனுமதித்திருக்கிறார்கள். அவருடைய நிலைமை கவலைக்கிடமாக இருப்பதால் உங்களிடம் தகவல் தெரிவித்து விட்டு வருவதற்காக ஆஸ்பத்திரியிலிருந்து என்னை இங்கே அனுப்பினார்கள்" என்று கூறி முடித்தான் அவன்.

ஆஸ்பத்திரிச் சேவகன் கூறிய வரலாற்றைக் கேட்டதும் பதறிப் போனாள் கமலா. விவரிக்க இயலாத வேதனையை அளிக்கும் எண்ணச் சுழல்களில் சிக்குண்டு அவள் சித்தம் கலங்கியது. பக்கத்து வீட்டுப் பங்கஜத்தின் தாயாரிடம் தகவலைத் தெரிவித்து விட்டுப் பங்கஜத்தையும் துணைக்கு அழைத்துக் கொண்டு அந்த ஆஸ்பத்திரிச் சேவகனைப் பின்தொடர்ந்தாள் கமலா.

போகும் வழி நெடுக ராமாமிர்தத்தின் உயிருக்கு ஆபத்து நேராதிருக்க வேண்டுமே என்று அவள் வேண்டிக் கொள்ளாத தெய்வமில்லை. ஆஸ்பத்திரி வாசலை அடைந்ததும் சேவகன் அவர்கள் இருவரையும் வராந்தாவில் நிறுத்தி விட்டு உள்ளே சென்று சற்று நேரத்திற்கெல்லாம் திரும்பி வந்தான். "அவரை ஆப்பரேஷன் தியேட்டரில் வைத்துக் காயங்களுக்குக் கட்டுப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அது முடிந்ததும் உடம்பிலிருந்து வெளியான ரத்தச் சேதத்துக்கு ஈடு கொடுக்கப் புது ரத்தம் கொடுத்தாலும் கொடுப்பார்களாம். இதெல்லாம் முடிய இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும். எதற்கும் நீங்கள் ஆப்பரேஷன் தியேட்டர் பக்கத்திலிருக்கும் அறையில் இருக்கலாம்" என்று கூறி அவர்கள் இருவரையும் ரண சிகிச்சை செய்யும் பகுதியிலுள்ள ஒரு அறையில் அமர்த்திவிட்டுச் சென்றான்.

அந்த அறையில் காத்துக்கொண்டிருந்த கமலாவுக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகம் போல நீண்டுகொண்டே போயிற்று. அழுது அழுது அவள் கண்கள் சிவந்து போயிருந்தன. அன்று காலை காமாட்சியிடமிருந்து வந்த கடிதத்தில் காமாட்சி மாங்கல்யப் பிச்சை கோரி எழுதியிருந்ததைப் பற்றி ஏளனமாகவும் அசிரத்தையாகவும் நினைத்தது அவள் ஞாபகத்துக்கு வந்தது. அதன் விளைவாகத்தான் தனக்கு அப்பொழுது அந்தச் சோதனை ஏற்பட்டதோ என்று கூட ஐயுற்றது அவள் உள்ளம். சித்தப் பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள்.

இவ்விதமாக சுமார் அரை மணி நேரம் சென்றது. அவள் இருந்த அறைக்குள் யாரோ நுழை



"அன்றைக்கு ஒரு வதந்தியைப் பற்றிச் சொன்னேனே, அதன் உண்மையைச் சொல்லட்டுமா?"

"உண்மை வேண்டவே வேண்டாம், ஐயா! வதந்திதான் கேட்பதற்குச் சுவாரஸ்யமாக இருக்கிறது."

---

யும் காலடிச் சத்தம் கேட்டது. திகில் அவள் மனத்தைத் திருகிப் பிழிய, வருபவன் ஆஸ்பத்திரி சேவகனாகத்தானிருக்க வேண்டுமென்று எண்ணித் திரும்பிப் பார்த்தாள். உள்ளே நுழைந்தது ஆஸ்பத்திரிச் சேவகன் அல்ல! அதை முதலில் பார்த்த பங்கஜம் "அக்கா, இதோ யார் வந்திருக்கிறார்கள் பாருங்கள்" என்றாள் குதூகலத்துடன். அதை அடுத்து ராமாமிர்தம் உடலில் ஒரு காயமுமின்றி, காலையில் ஆபீசுக்குப் போகும்போது அணிந்து கொண்டு போன உடுப்புகள் கலுங்காமல் கமலாவிடம் வந்தான். "நீங்கள்" என்று கூறி அவனைப் பார்த்த சந்தோஷத்தினால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து கமலா விடுபட்டதும் ராமாமிர்தம், "கமலா! பஸ் விபத்தில் அகப்பட்டுக் கொண்டது நான் இல்லை. நான் ஆபீசை விட்டு வீட்டுக்குப் போனதும் பங்கஜத்தின் தாயாரிடமிருந்து முழு விவரங்களையும் தெரிந்துகொண்டு உன்னைப் பார்ப்பதற்காக இங்கே ஓடோடியும் வந்தேன். பாவம்! நீ மிகவும் கஷ்டப்பட்டிருப்பாய்! ஒரு நிமிஷம் இரு. நான் ஆஸ்பத்திரி அதிகாரியிடம் போய் நிலைமையை எடுத்துச் சொல்லிவிட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

சற்றுப் பொறுத்துக் கமலா இருக்குமிடத்துக்கு வந்தான் ராமாமிர்தம். "கமலா! வீட்டுக்குப் போகலாம். அங்கு போனதும் எல்லாவற்றையும் பற்றி விவரமாகச் சொல்லுகிறேன்" என்றான் அவன். பிறகு ராமாமிர்தம், கமலா, பங்கஜம் மூவரும் ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பினர்.

வீட்டுக்குச் சென்றதும் கமலாவை ராமாமிர்தம் தனியாகச்சந்தித்து, "கமலா, இன்றைக்கு உண்மையிலேயே நான் அந்தப் பஸ் விபத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்க வேண்டும். ஆனால் தெய்வாதீனமாகத் தப்பிப் பிழைத்தேன். பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸில் ஏறினதும் சார்ஜ் கொடுப்பதற்காகக் கோட் பையில் கையை விட்டேன். அப்போது தான் என் ஆபீஸ் விலாசத்துக்கு எனக்கு வந்த கடிதம் ஒன்றை நான் பார்க்க முடிந்தது. அதை வேலை நெருக்கடியில் ஆபீஸிலிருக்கும்போது பிரித்துப் படிக்க முடியவில்லை. அந்தக் கடிதத்தைப் பஸ்ஸில் வைத்துப் பிரித்து வாசித்தேன். அது என்னுடைய அத்திம்பேருக்குச் சிகிச்சை செய்யும் டாக்டரிடமிருந்து வந்திருந்தது. அத்திம்பேருக்கு இன்னும் இரண்டு மாதத்திற்குப் புது மருந்து ஒன்று கொடுத்துச் சிகிச்சை செய்தால் பூர்ணமாக குணமடைந்து விடுவார் என்றும் அதற்கு வேண்டிய மருந்து திருச்சியில் தாராளமாகக் கிடைக்காததால் பம்பாயிலிருந்து இரண்டு பாக்கெட் வாங்கி அனுப்பும்படி எழுதியிருந்தார். நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை யாதலால் மருந்துக் கடைகள் மூடியிருக்கும் என்று நினைவுக்கு வந்தது. உடனே பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி மருந்துக் கடைக்குப் போய் மருந்தை வாங்கித் தபால் மூலம் அனுப்ப ஏற்பாடு செய்து விட்டு அப்படியே காமாட்சிக்குச் செலவுக்கு நூற்றைம்பது ரூபாய் மணியார்டர் பண்ணிவிட்டுத் திரும்பியபோதுதான் ஞாபக மறதியாக டிபனையும் ரேஷன் கார்டையும் போட்டுக் கொடுத்த பையைப் பஸ்ஸில் வைத்தது நினைவுக்கு வந்தது. அந்தப் பையின் பக்கத்தில் நான் பஸ்ஸை விட்டு இறங்கியதும் உட்கார்ந்தவர் பஸ் விபத்தில் அகப்பட்டுக் கொள்ளவே அவர்தான் அந்தப் பையின் சொந்தக்காரர் என்று நினைத்து ஆஸ்பத்திரியிலிருந்து நம்முடைய வீட்டுக்கு ஆள் அனுப்பியிருக்கிறார்கள். என்னுடைய அஜாக்கிரதையினால்தான் இவ்வளவு களேபரமும் ஏற்பட்டது" என்று கூறி முடித்தான் ராமாமிர்தம்.

"அது இருக்கட்டும். போனஸ் பணத்தில் இன்னும் எவ்வளவு பாக்கியிருக்கிறது?" என்று கேட்டாள் கமலா.

"இருநூற்று ஐம்பது ரூபாய் பாக்கியிருக்கிறது" என்றான் ராமாமிர்தம்.

"அப்படியானால் அந்தப் பணத்தை இப்போதே காமாட்சி அக்காவுக்குத் தந்தி மணியார்டரில் அனுப்பி விடுங்கள்" என்றாள் கமலா.

"உனக்கு வைர பேஸரி வாங்குவதற்காக அதைத் தனியாக ஒதுக்கி வைத்திருக்கிறேன். காலையில் நீ என்னிடம் சொன்னதை மறந்து போய் விட்டாயா!" என்று வினவினான் ராமாமிர்தம் ஆச்சரியத்துடன்.

"எனக்கு இப்பொழுது வைர பேஸரிக்கு அவசரமில்லை. இன்றைக்கு எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்தது உங்கள் தமக்கைதான். உங்கள் அத்திம்பேருக்கு மருந்தும், காமாட்சி அக்காவுக்குப் பணமும் அனுப்புவதற்காக நீங்கள் பஸ்ஸை விட்டு இறங்கியிராவிட்டால் என்னுடைய கதி என்ன ஆகியிருக்கும்! அதை நினைக்கக் கூட எனக்கு மனம் பதறுகிறது. இன்று காலையில் காமாட்சி அக்காவிடமிருந்து எனக்கு வந்த கடிதத்தைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்காமல் இருந்ததற்கு நான் பட்ட தண்டனை என் ஆயுள் முழுவதற்கும் போதும். அவர் செய்த பேருதவிக்கு என்றென்றைக்கும் நான் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று கூறி விட்டு விரைந்து சென்று அன்றைக்குக் காமாட்சியிடமிருந்து வந்த கடிதத்தைக் கொண்டு வந்து ராமாமிர்தத்தினிடம் கொடுத்தாள் கமலா.

ராமாமிர்தம் அந்தக் கடிதத்தை வாசித்து முடித்ததும் "இனிமேலும் தாமதிக்காதீர்கள். தபாலாபீஸுக்குப் போய் அந்தப் பணத்தை நான் காமாட்சி அக்காவுக்குச் செலுத்த வேண்டிய காணிக்கையாக நினைத்து அனுப்பி விட்டு வாருங்கள்" என்றாள் கமலா நாத்தழுதழுக்க.

அடுத்த விநாடி கையில் பணத்துடன் தபாலாபீஸை நோக்கி விரைந்தான் ராமாமிர்தம்.

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன்

## செய்தீர்களா?



“கடந்த சில ஆண்டுகளாக நான் மக்ளீன்ஸ் பற்பசையை உபயோகித்து வருகிறேன். அதிலிருந்து என் பற்களைப் பார்ப்பவர்கள் ஒவ்வொருவரும் ஆச்சரியப்படுகிறார்கள்.”

ஆனந்தமும், ஆரோக்கியமும் கூடிய தங்கள் புன்னகையை அளிக்க மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் உங்கள் ஈறுகளைப் பாதுகாத்து, சுவாசத்தை இனியதாக்கி பற்களைப் பளபளவென்று வெண்மையாக்கும். இவையாவும் ஏககாலத்தில் செய்வதை நீங்கள் அறிவீர்கள்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை பிரத்தியேகமான ஆராய்ச்சி முறையினால் தயாரிக்கப்பட்டது. அதன் சுத்தத்திற்கு உத்தரவாதம். அதனால்தான் உலகெங்குமுள்ள கோடிக்கணக்கான மக்கள் தினமும் தங்கள் பற்களை சுத்தம் செய்ய இருவேளை மக்ளீன்ஸை உபயோகித்து வருகிறார்கள்.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




வியாபார விபரங்களுக்கு: ஜே. எல். மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.




"இரண்டு தலைகளும் நான்கு கால்களும் ஆறு கைகளும் கொண்ட குழந்தை ஆதி சங்கரபுரத்தில் பிறந்தது" என்பதாக ஒரு செய்தி.

இதைக் 'குண்டு' என்ற பத்திரிகையும் பிரசுரிக்கும். 'ஃப்பிரஸ்' என்ற பத்திரிகையும் பிரசுரிக்கும். ஆனால் ஒரு வித்தியாசம்.

குண்டுப் பத்திரிகை மேற்படி செய்தியை ரொம்ப ரொம்பப் பொடி எழுத்தில் யார் கண்ணிலாகிலும் பட்டுவிடப் போகிறதே என்று பயந்து கொண்டே பிரசுரிக்கும்.

ஃப்பிரஸ் பத்திரிகை இதற்கு நேர் எதிரிடை. இந்தச் செய்தியை, நட்சத்திரப் பெட்டி கட்டிப் பெரிய எழுத்தில் பத்திரிகையின் முதல் பக்கத்தில் எல்லோருடைய கண்ணிலும் பட வேண்டுமே என்ற கவலையோடு பிரசுரிக்கும்.

ஸ்ரீமான் ராகவாச்சார் ஸ்வாமியை உங்களுக்குத் தெரியுமோ, என்னவோ? அவர் தினம் படிப்பது குண்டுப் பத்திரிகையைத் தான். அந்தப் பத்திரிகையின் முதல் எழுத்திலிருந்து கடைசி எழுத்து வரை படித்தால் தான் அன்றையப் பொழுது நல்லபடியாகப் போனதாக அவர் கருதுவார். இல்லையேல் அவர் மனசு குறு குறு என்று வேதனைப்படும். சாப்பிட்டால், சாப்பிட்டதாகவே தோன்றாது. குளித்தால், குளித்ததாகத் தோன்றாது.

திருவாளர் ஆவுடையப்ப பிள்ளை எப்படித் தெரியுமோ? அவர் நாள் தவறாமல் ஃப்பிரஸ் பத்திரிகையைப் படிப்பவர். அந்தப் பத்திரிகையின் மேன்மையை வானளாவப் புகழ்வார். "அந்தப் பத்திரிகையைப் பார்த்தால் ஒரு விநாடியில் அன்றைய அகில உலகச் செய்திகளையும் தெரிந்து கொள்ளலாமே! ஒவ்வொரு பத்திரிகையைப்போல்செய்தியைத் தேடிக்கொண்டு உட்காரவேண்டாம்; செய்தி தானாகவே வந்து கண்ணில் குத்தும்" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வார்.

இந்த இரண்டு நபர்களும் ஒரே ஆபீசில் வேலை செய்பவர்கள். மாம்பலத்திலிருந்து மின்சார வண்டியில் இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் கடற்கரை ஸ்டேஷனுக்குத் தினம் பிரயாணம் செய்பவர்கள். ஆகவே, ரயிலில் அரட்டைக் கச்சேரி பிரமாதப்படும்.

தினம் அவரவர்கள் பத்திரிகையை ஒழுங்காக ஒரு எழுத்து விடாமல் படிக்கும் இவர்கள் ரயிலில் காலையில் முதன் முதலாகச் சந்தித்தார்களென்றால் என்ன விஷயத்தைப் பற்றிப் பேச ஆரம்பிப்பார்கள் தெரியுமா? நீங்கள் ஏதோ அன்றையதினம் வெளியான நேருஜியின் பிரசங்கத்தைப் பற்றியோ, சென்னை சட்ட சபையில் நிகழும் பட்ஜட் விவாதத்தைப் பற்றியோ, காஷ்மீர் பிரச்னையைப் பற்றியோ, கொரியாப் போர் முனையைப் பற்றியோ பேசக்கூடும் என்று எதிர் பார்ப்பீர்கள். அதுதான் கிடையாது.

"என்ன ஐயங்கார் ஸார்! இன்றையப் பத்திரிகையைப் பார்த்தீர்களோ, ஒரு அதிசயமான செய்தி வந்திருக்கிறதே!" என்று ஆரம்பிப்பார் ஸ்ரீமான் பிள்ளை.

"இரண்டு தலை ஆறு கை, நாலு காலுடன் கூடிய குழந்தை பிறந்திருப்பதாக ஒரு செய்தி வந்ததே, அதைத்தானே சொல்கிறீர்கள்!" என்பார் ஐயங்கார்.

"ஆமாம், ஆமாம். அதையேதான் நானும் சொல்கிறேன். எவ்வளவு ஆச்சரியமாக இருக்கிறது, பார்த்தீர்களா? ஈசன் படைப்பிலே எத்தனை விசித்திரம்......"

இப்படிச் சம்பாஷணை தொடரும்.

இதில் ஒருவர் மேற்கண்ட செய்தியைக் கண்ணுக்குத் தெரியாத எழுத்தில் பிரசுரிக்கப்பட்ட பத்திரிகையைப் படிப்பவர்; மற்றொருவர் கொட்டை எழுத்தில் படிப்பவர்! இவர்களுக்குள் எத்தகைய அபிப்பிராய ஒற்றுமை; ருசி ஒற்றுமை!

இதிலிருந்து மனுஷ சுபாவத்தில் இத்தகைய விசித்திரமான செய்திகளைப் படிப்பதில் ஓர் இயற்கையான ஆர்வம் இருக்கிறதென்பது வெளிப்படுகிறதல்லவா?

ஆனால் ஒரு கவிஞன் பத்துத் தலைகள் கொண்டு ஒருவன் இருந்தான் என்று கதைக்காகச் சொன்னால்கூட ஏற்கத் தயாராய் இல்லை. "பத்துத் தலைகளுடன் ஒருவன் இருக்க முடியுமா, ஸார். வெறும் பொய்" என்கிறார்கள். ஏதோ யாருமே கண்டு பிடிக்காத அதிசய உண்மையைக் கண்டு பிடித்து விட்டதுபோல் பேசுகிறார்கள்.

சிங்கத்தின் தலையும் மனித உடலையும் பெற்ற ஒரு உருவம் இருக்க முடியுமா? ஆதிமூலமே என்று ஒரு யானை ஓலமிடுமா?

அதுமட்டுமல்ல. ஆதிமூலமே என்று அலறியவுடன், ஸ்ரீமந் நாராயணன் வந்து யானையைக் காப்பாற்றினான் என்று கூறப்படுகிறதே, அது கொஞ்சமாவது நம்பக் கூடியதாக இருக்கிறதா?

தூணைப் பிளந்தவுடன் நரசிம்ம மூர்த்தி வெளிப்பட்டுப் பிரகலாதனைக் காப்பாற்றியது கதைக்குக் கூட ஒப்பக் கூடியதாக இல்லையே!

# மேலும் மேலும் வெற்றி மாலை!




ராயல சீமையில் பல கிணறுகளை ஆழமாகத் தோண்டித் தண்ணீர்ப் பஞ்சத்தைத் தீர்த்த இந்திய ராணுவத்தார் தமிழ் நாட்டு வறட்சிப் பிரதேசங்களில் கிணறுகளை ஆழமாக்கும் முயற்சியிலும் நல்ல வெற்றி அடைந்து வருகிறார்கள். சேலம் ஜில்லாவில் இராணுவத்தின் கிணறு தோண்டும் சேவையைப் பாராட்டிச் சேலம் ஜில்லா கலெக்டர் வெள்ளி ஷீல்டு ஒன்றை வழங்கினார்.

---

காரண காரிய முறைப்படி, பகுத்தறிவுக்கு ஒட்டியதாக இல்லை என்று வாதாடுவார்கள்.

இப்படிப் பட்டவர்களுக்கு ஒரு நோய் வந்து விட்டால், அவ்வளவு பகுத்தறிவும் பஞ்சாய்ப் பறந்துவிடும். டாக்டர் வந்து, இவர்களைப் பரிசீலனை செய்து மூன்றுமாத காலம் இன்ன மருந்தைச் சாப்பிட வேண்டும் என்று சொல்லிவிட்டுப் போவார். ஆனால் அவர்களால் அதை ஏற்க முடியாது. "மூன்று மாதமா? அப்பப்பா! எவ்வளவு நீண்ட காலம்! எப்படி ஸார், அத்தனை நாட்கள் பொறுமையுடன் மருந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பது?" என்று கேட்பார்கள். காரண காரிய முறைப்படி நோய் நீங்கி, உடல் இயல்பான தன்மையடைய அத்தனை நாள் பிடிக்கும் என்னும் விதி அந்தக் கணம் அவர்களுக்குப் பிடிக்காது!

"மூன்று நாட்களில் குணப்படுத்தக் கூடிய அதிசய மருந்து! இல்லையேல், ரூ. 5000 ரொக்கப் பரிசு" என்று விளம்பரப் படுத்தப் படும் போலி மருந்துகளை வாங்கி உண்ணைத் தான் பார்ப்பார்கள். காரணம், பகுத்தறிவுக்கு அப்பாற் பட்ட அதிசயங்களில் அவர்களுக்கு உள்ள நம்பிக்கைதான்!

என் நண்பர் ஒருவருக்குத் திடீரென்று தம் தேகத்தை வலிவும் வனப்பும் உள்ளதாகச் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசையுண்டாகிவிட்டது. தேகாப்பியாச நிபுணரிடம் சென்றார். அவர் நாள் தவறாமல் தேகாப்பியாசம் செய்துவரும்படி சொன்னார். "எத்தனை நாள் செய்ய வேண்டும்?" என்று கேட்டார் நண்பர். "குறைந்தது ஆறுமாத காலமாவது செய்தால்தான் கணிசமான பலன் தெரியும்" என்றார் நிபுணர்.

"அப்பப்பா! அத்தனை நாட்களா? உங்களிடம் வந்தால் பத்துப் பதினைந்து நாட்களில் ஏதாகிலும் செய்து என் தேகத்தை வஜ்ர தேகமாகச் செய்து விடுவீர்கள் என்றல்லவா நினைத்தேன்!" என்றார் நண்பர்.

"நீங்கள் நினைக்கிறபடி செய்ய நான் மந்திரவாதியல்லவே!" என்றார் நிபுணர்.

இப்படி எத்தனையோ பேர்! "விரையொன்று போட்டால் சுரையொன்று முளைக்குமா, ஸார்?" என்று காரசாரமாகக் கேட்பார்கள். ஆனால் அவர்கள் சொந்த விஷயத்தில் சுரை முளைக்கக் கூடாதா என்று நினைப்பார்கள்! ஏங்குவார்கள்! தவங்கிடப்பார்கள்!

"அது சரி, இத்தகைய மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள், சற்று காட்டுங்கள்!" என்று கேட்கிறீர்களா?

உங்கள் மனசின் மீது கை வைத்துப் பாருங்கள். நீங்களும் நானுமே அத்தகைய அதிசய மனிதர்கள் என்பது புலப்படவில்லையா?

ஆம், அதிசயமான உலகத்தைப் படைத்து, அதில் நம்மையும் படைத்தானே, அந்த அதிசயத்தை என்னவென்று சொல்வது?

- செடி, கொடி, மரங்கள் வளர்ச்சி பெறாமல் நின்றால் மடிவு காலம்.

- அதேபோல் வியாபாரம் வளர்ச்சி யின்றேல் மடிவுதான்.

- எங்கள் வியாபாரம் வருஷா வருஷம் வளர்ச்சி பெற்றுக்கொண்டே வந்திருக்கிறது.

- நியாயமான வர்த்தக முறை இன்றேல் வளர்ச்சி யிருக்க முடியாது.

- நாங்கள் சொல்வதும் எங்கள் வாடிக்கைக் காரர்கள் நினைப்பதும் சரிதானென்று, தங்களுக்கு பட்டு, நூல், கம்பளித் துணிகள் தேவையுள்ள பொழுது எங்களை விசாரியுங்கள்.

- **6, 8, 9 கஜம் உயர்ந்த பங்களூர், பனாரீஸ், காஞ்சீவரம், பங்கால்,** பட்டுப் புடவைகளுக்கு எங்கள் கடைகள் பெயர் போனவை.

- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் எங்களிடம் கிடைக்கும்.

○●○

*Branch :*

**"FANCY HALL"**

சைனா பஜார்

**திருச்சிராப்பள்ளி**

Telegrams : "BONTEX"

**P. R. நாராயணசாமி அய்யர்**

ஜவுளி வியாபாரம்

**பெரிய கடை வீதி,**

**திருச்சிராப்பள்ளி**

Telephones : 26. 26-A



— பரிசுக் கதை —

ஆசிரியர்: நேக்டேட் ஆக்மேன் (துருக்கி)

மொழிபெயர்ப்பு: வாஞ்சி

இரவு முழுதும் இடைவிடாமல் பனி பெய்த தால் பொழுது விடிந்ததும் நகர் எங்கும் ஒரே பனிக் கட்டி மயமாக இருந்தது. நடை பாதை எது, ரஸ்தா எது, மேடு எது, பள்ளம் எது என் பதே தெரியவில்லை. மரங்களின் மீதும் வீட்டு மாடிகளின் மீதும் பனிக் கட்டிகள் கொத்துக் கொத்தாகக் காணப்பட்டன. தந்திக் கம்பிகள் எல்லாம் பனிக் கட்டிகளால் மூடப்பட்டிருந்தன. பல் வேறு வேலைகளுக்கும் காரியாலயங்களுக்கும் செல்லுவோர் பனிக்கட்டிகளின் மீது தட்டுத் தடு மாறிச் சென்று கொண்டிருந்தனர்.

தெருவின் முனையில் உள்ள பங்களாவில் வசித்து வந்த யுவதி குளிர் தாங்காமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாள். கம்பளிக் கோட்டால் தன் தேகத்தை இறுக மூடிக்கொண்டாள். அத்துடன் குளிர் காய்வதற்கு என்று ஏற்பட்ட அடுப்பு நன் றாக எரிந்து கொண்டிருந்ததால், அன்றையக் கடும் குளிரை அவளால் ஒருவாறு சமாளிக்க முடிந்தது.

பங்களாவை அடுத்துள்ள ரஸ்தாவை அவள் கண் ணாடி ஜன்னலின் வழியாகப் பார்த்தபோது, அவள் கண்களை அவளால் நம்பவே முடியவில்லை. அங்கு தொழிலாளிகள் மிகவும் கஷ்டப்பட்டுப் பனிக்கட் டிகளை வண்டிகளில் வாரி, ரஸ்தாவைச் சீர்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கிழிந்த சட்டை களைப் போட்டுக் கொண்டிருந்ததால், அவர்களின் உடலில் பாதி திறந்திருந்தது. அப்படியிருந்தும் அவர்கள் கடும் குளிரை லட்சியம் செய்யாமல் குதூகலமாகப் பாடிய வண்ணம் தங்கள் வேலை யைச் செய்து கொண்டிருந்தார்கள்.

பங்களாவுக்குள் சகல வசதிகளுடன் இருக்கும் தான் 'குளிர் தாங்க முடியாமல் கஷ்டப்படும் அந்த நேரத்தில், மேற்படி தொழிலாளர்கள் குளிரை ஏளனம் செய்வது போல் பாடிக் கொண் டும் விளையாட்டாகவும்', ஓய்வின்றிக் கடினமான வேலையைச் செய்தது அவளுக்கு மிகுந்த ஆச்சரி யத்தைக் கொடுத்தது.

ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பல குழந்தைகள் பனிக் கட்டிகளை ஒருவர் மீது ஒருவர் எறிந்து விளையாடிக் கொண்டிருந்ததை அவள் கண் கொட் டாமல் கவனித்தாள். மேற்படி காட்சியை அவ ளால் நம்பவே முடியவில்லை.

"இந்தக் குளிரில் நான் 'இவர்களைப் போல் தகுந்த உடை இல்லாமல் சிறிது நேரம் இருந் தால் உயிர் துறக்க வேண்டியதுதான்" என்று அவள் வாய் முணு முணுத்தது.



அப்போது ஜன்னலுக்கு வெளியே ஒரு பையன் நிற்பது அவளுக்குத் தெரிந்தது. அவன் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் எதற்காக அப்படி உற்றுக் கவனிக்க வேண்டும்! அவன் ஏதோ கெட்ட எண்ணத்துடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான் என்றும் சொல்லுவதற்கில்லை.

ஏனெனில் அந்தப் பையனுக்குப் பதினறு அல்லது பதினேந்து வயதுதான் இருக்கும். அவனது உடல் துரும்பாக இளைத்திருந்தது. முகம் அழுக்கடைந்து கிடந்தது. அவனது மேல் சட்டை கிழிந்திருந்ததால், அவன் உடலில் பாதி பாகம் தெரிந்தது. அவன் அணிந்திருந்த கால் சட்டையும் கந்தலாக இருந்தது. அவன் தேகம் குளிர் தாங்க முடியாமல் உதறிக் கொண்டிருந்தது.

அவன் இயற்கையாகவே ஏழையா அல்லது அது செயற்கை வேஷமா என்பதையே அவளால் நிர்ணயிக்க முடியவில்லை.

அவன் அருவருக்கத்தக்க அவனுடைய தோற்றத்தைக் கண்டு அப்பால் செல்ல யத்தனித்தாள். அதே சமயம் அவள் மனத்தின் ஒரு மூலையில் சிறிதளவு அநுதாப உணர்ச்சியும் ஏற்பட்டது.

எனவே அவள் ஜன்னல் கதவைச் சிறிது திறந்து எட்டிப் பார்த்தாள்.

"அம்மா, தாயே! பசி தாங்க முடியவில்லை. சிறிது உணவு கொடுத்தால் அதற்குப் பிரதியாக உங்கள் வீட்டில் ஏதாவது வேலை செய்துவிட்டுப் போகிறேன். பனிக்கட்டிகளை யெல்லாம் அப்புறப்படுத்தி விடுகிறேன்" என்று மிகவும் கெஞ்சினன் அந்தப் பையன்.

அதற்கு மேற்படி யுவதி, "இங்கு நீ செய்வதற்கு ஒரு வேலையும் இல்லை. போய் வா" என்று சொல்ல வாயெடுத்தாள். ஆனல் அவ்விதம் சொல்லுவதற்கு அவள் மனம் இடம் கொடுக்கவில்லை.

"சரி, ஏதாவது தருகிறேன். அந்தப் புறத்தில் உள்ள பனிக் கட்டிகளை அப்புறப் படுத்திவிடு" என்று கூறினள்.

இதைக் கேட்டதும் அந்தப் பையனின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. அந்த யுவதி இட்ட வேலையைச் செய்வதில் அவன் மும்முரமாக ஈடுபட்டான். அவனுக்கு உணவு தயார் செய்வதற்காக அவள் உள்ளே சென்றாள்.

அந்தப் பையனின் கையிலிருந்த கருவி பனிக் கட்டிகளை அப்புறப் படுத்திக் கொண்டிருந்தது. ஆனல் அவன் கண்களும் கவனமும் வேறிடத்தில் இருந்தன. அவன் அந்தப் பங்களாவையும், அதில் உள்ள கதவுகள், ஜன்னல்கள், பங்களாவைத் தொட்டு நிற்கும் மரங்கள் இவைகளையும் அடிக்கடி கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்தான்.

உணவு தயார் செய்ய உத்தேசித்த யுவதியின் மனம் உள்ளே சென்றதும் மாறி விட்டது. இரவில் சாப்பிட்டு மிச்சமிருந்த பழைய ரொட்டியையும் குழம்பையும் அந்தப் பையனுக்குக் கொடுத்து விட்டால் போகிறது; அந்தப் பிச்சைக்காரனுக்குப் பிரத்தியேகமாகப் புதிய உணவு எதற்காகத் தயார் செய்ய வேண்டும்!

இந்த எண்ணம் முதலில் அவளுக்குத் திருப்தியைக் கொடுத்தது. எனினும், குப்பையில் கொட்ட வேண்டிய பழைய உணவை அவனுக்குக் கொடுக்க முற்பட்டதற்காக அவளது மனச்சாட்சி அவளை உறுத்தத் தொடங்கியது.

பையன் தன் வேலையை ஒருவாறு முடித்துவிட்டுப் பங்களா வாசற்படியில் வந்து நின்றான். அவள் தான் கொண்டு வந்த அந்தப் பழைய உணவை அவனுக்குக் கொடுத்தாள்.

அவன் அதைக் கையில் வாங்கிக் கொண்டு பேசாமல் திரும்பிச் செல்ல முற்பட்டான். தான் கொடுத்த உணவு அவனுக்குத் திருப்தியைக் கொடுக்க வில்லையோ என்ற சந்தேகம் அந்த யுவதிக்கு ஏற்பட்டது.

உடனே அவள் அந்தப் பையனைக் கூப்பிட்டாள். "ஏன் அப்பா, உனக்குக் குளிரவில்லையா!" என்று பரிவுடன் கேட்டாள்.

"குளிர் தாங்க முடியவில்லை. அது என்னுடைய தேகத்தில் ஊடுருவி எலும்பைப் போய்த் தாக்குகிறது" என்று பரிதாபமாகப் பதில் அளித்தான் அந்தப் பையன்.

"சற்று இங்கேயே இரு" என்று சொல்லிவிட்டு அவள் உள்ளே சென்றாள். பல மாதங்களுக்கு முன் தன் கணவன் போட்டுக் கொண்டு எறிந்திருந்த ஒரு பழைய கம்பளிச் சட்டையை எடுத்துக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள்.

அதை வாங்கியபோது அந்தப் பையனின் கைகள் நடுங்கின. உணவைக் காட்டிலும் மேற்படி சட்டை அவனுக்கு அதிகச் சந்தோஷத்தைக் கொடுத்தது. சட்டையைக் காட்டிலும் அந்த யுவதியின் அன்பு அவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை உண்டாக்கியது.

அவன் அதை வாங்கி அந்த இடத்திலேயே போட்டுக் கொண்டான்.

"தாயே! கடவுள் உங்களுக்குக் கிருபை செய்வார்" என்றான். அவன் கண்களில் நீர் சுரந்தது.

நன்றியுடன் அவளைப் பார்த்த வண்ணம் வந்த வழியே திரும்பிச் சென்றான்.

அந்த யுவதி தான் ஏதோ ஒரு பெரிய தர்ம காரியம் செய்து விட்டதாகப் பெருமிதம் அடைந்தாள். உள்ளே சென்று கண்ணாடியில் தன் முகத்தையும் தோற்றத்தையும் ஒரு தடவை பார்த்துக் கொண்டாள். அவளுடைய முகத்தில் வசீகரமான புன்முறுவல் தவழ்ந்தது.

* * *

மேலே குறிப்பிட்ட சம்பவம் நிகழ்ந்த அதே தினத்தில் மாலை ஏழு மணி இருக்கும்.

"இன்றைக்கும் கடுமையான பனி பெய்யும் போல் தோன்றுகிறது" என்று அந்த யுவதி தனக்குள் சொல்லிக் கொண்டாள். வெளியே பார்ப்பதற்காகக் கண்ணாடி ஜன்னலுக்கு அருகில் போய் நின்றாள்.

அப்போது அவள் அங்கே கண்ட காட்சி அவளைத் திடுக்கிடச் செய்தது. 'துரோகி' என்று அவளை அறியாமல் அவள் வாய் முணு முணுத்தது.

அன்று காலையில் எந்தப் பையனுக்கு இரங்கி அவள் உணவும் உடையும் கொடுத்தாளோ, அந்தப் பையன் மரங்களின் மறைவில் ஒண்டி ஒண்டி ஜன்னலை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

அவன் ஏதோ கெட்ட எண்ணத்துடன் தான் அவ்விதம் வருகிறான் என்பதை அவள் தெரிந்து கொண்டாள். இல்லாவிடில் அவன் மறைந்து மறைந்து தனியாக ஏன் வர வேண்டும்!

பங்களாவுக்குள் அவன் திருட்டுத் தனமாக நுழைந்தால் அவனைப் பிடித்து நாலு அறை கொடுத்து விரட்டும் சக்தி அவளுக்கு உண்டு. எனவே, அவனது உத்தேசம் என்ன என்பதை அறிந்து கொள்வதற்காக அவள் ஜன்னலுக்கு அருகில் மறைந்து கொண்டு நின்றாள்.

பையன் ஜன்னலுக்கு அருகில் வரவர யுவதியின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. அந்தப் பையன் ஜன்னல் கதவை மெதுவாகத் தள்ளினான். தன் கையில் வைத்திருந்த ஒரு கடிதத்தை அறைக்கு உள்ளே சந்தடி செய்யாமல் வீசி எறிந்தான். பிறகு திரும்பிப் பாராமல் வந்த வழியே ஓட்டம் பிடித்தான்.

யுவதிக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. இருபது வயது கூட நிரம்பாத ஒரு பிச்சைக்காரப் பையன் தனக்குக் காதல் கடிதம் எழுதுவதா! என்ன துணிச்சல்!

இனிமேல் பிச்சை என்று எவன் வந்தாலும் உணவு கொடுப்பதில்லை என்று மனதுக்குள் உறுதி செய்து கொண்டாள்.

அந்தக் கடிதத்தை எடுத்து அதை வாசிக்காமலேயே சுக்கு நூறாகக் கிழித்துவிட வேண்டும் என்று அவளது கைகள் துடித்தன. அதே சமயம் கடிதத்தில் அந்த அயோக்கியப் பையன் என்ன தான் எழுதியிருக்கிறான் என்பதைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தையும் அவளால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

கடிதத்தைப் பிரித்தாள். அதில் நாலே வரிகள் தான் எழுதப் பட்டிருந்தன.

'' சகோதரி !

உங்கள் பங்களாவில் இன்றிரவு கொள்ளையடிப் பதற்குச் சிலர் திட்டம் போட்டிருக்கிறார்கள். தயவு செய்து முன் ஜாக்கிரதையாக இருங்கள்.''

மேற்படி கடிதத்தைப் பார்த்ததும் அவள் மனத்தில் பல்வேறு எண்ணங்கள் எழுந்தன. அந்தப் பையன் நல்ல எண்ணத்துடன் அக் கடிதத்தை எழுதியவனாக அல்லது அதில் வேறு ஏதாவது சூழ்ச்சி இருக்கக் கூடுமா! அது உண்மை என்றே வைத்துக் கொண்டாலும், அவ்விஷயம் இந்த ஏழைப் பிச்சைக்காரப் பையனுக்கு எப்படித் தெரிந்தது !

கொள்ளைக்காரர்கள் குறிப்பிட்ட இரவில் தாங்கள் எந்த வீட்டில் கொள்ளையடிக்கத் தீர்மானிக்கிறார்களோ, அந்த வீட்டுக்குப் பகலில் சென்று வேவு பார்த்து வருவதற்காக மேற்படி பையனை அனுப்புவது வழக்கம். அன்று அந்த வீட்டில் எத்தனை பேர் இருக்கிறார்கள், யார் யார் வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள் என்ற விவரங்களை அந்தப் பையன் அறிந்து சென்று அவர்களிடம் கூறுவான். இரவிலும் கொள்ளைக்காரர்கள் தங்களுடைய அலுவல்களை ஆரம்பிக்கு முன் அந்தப் பையன் சென்று வேவு பார்த்து வருவது உண்டு.

அன்று காலை மேற்படி பையன் வேவு பார்த்துக் கொண்டிருக்கையில், அந்த யுவதி திடீரென்று அவனைப் பார்த்து ஜன்னல் கதவைத் திறந்து விட்டாள். அவளுக்குச் சந்தேகம் எதுவும் ஏற்படாமல் இருப்பதற்காகவே, " தாயே ! பசிக்கிறது. உணவு கொடுங்கள் " என்று கேட்டு வைத்தான் அந்தப் பையன்.

எனினும் அந்தப் பெண்ணின் அன்பு உள்ளம் அவன் மனத்தை மாற்றி விட்டது.

அவள் அந்தப் பழைய உணவைக் கொடுத்ததுடன் அவனைத் திருப்பி அனுப்பி யிருந்தால், அவனுக்கு அவள்மீது வெறுப்பு ஏற்பட்டிருக்கும். தான் செய்த வேலைக்குக் குப்பையில் எறிய வேண்டிய பழைய உணவுதானா கூலி என்று எண்ணி அவன் கோபம் கொண்டிருப்பான்.

ஆனால் அவள் அவனை வலுவில் கூப்பிட்டு ஒரு கம்பளிச் சட்டை கொடுத்தாள் அல்லவா ! அந்தக் கடும் குளிர் காலத்தில் உணவைக் காட்டிலும் கம்பளிச் சட்டைதான் முக்கியம். எனவே, அழகும் நல்ல குணமும் வாய்ந்த அவளுக்குத் துரோகம் செய்ய அவன் விரும்பவில்லை. ஆகையால் அவன் தன் எஜமானர்களான கொள்ளைக்காரர்களுக்குத் 'துரோகம்' செய்து விட்டான் !

அதாவது அவளுக்கு எச்சரிக்கைக் கடிதம் எழுதித் தன் எஜமானர்களான கொள்ளைக்காரர்களைக் காட்டிக் கொடுத்து விட்டான்.

உற்ற சமயத்தில் அவன் எச்சரித்திராவிட்டால், அந்தப் பெண்ணுக்கும் அவளுடைய விலையுயர்ந்த நகைகளுக்கும் என்ன கதி நேர்ந்திருக்கும் என்பதை யாராலும் சொல்ல முடியாது. அதிலும் அவளுடைய கணவன் வெளியூருக்குப் போயிருப்பது அவர்களுக்கு எப்படித்தான் தெரிந்ததோ !

அன்பும் இரக்கமும் கொண்டு அவள் செய்த அற்ப உதவி அவளது சொத்துக்களைக் காப்பாற்றியது. அது மாத்திரமல்ல, எது நல்லது எது கெட்டது என்பதையே அறியாமல் செல்லத்தகாத பாதையில் சென்று கொண்டிருந்த அந்தச் சிறுவனின் மனத்தைக் கிளறிச் சிந்தனையில் ஆழ்த்தி விட்டது.

அந்த யுவதியின் கோரிக்கைக்கு இணங்க அன்று போலீஸ்காரர்கள் பங்களாவில் மறைந்து கொண்டிருந்தார்கள். நடுநிசிக்குப் பிரபல கொள்ளைத் தலைவன் உள்பட நால்வரைக் கைப்பிடியாகப் பிடித்து விட்டார்கள்.

வெகுகாலமாகப் போலீசாரிடம் அகப்படாமல் ஏமாற்றிய கொள்ளைத் தலைவனைக் காட்டிக் கொடுத்ததற்காக அந்த யுவதிக்கு ஐந்நூறு பவுன் பரிசு கிடைத்தது !

ஆனால், மேற்படி பரிசுக்கு உரியவன் அந்தப் பையன்தான் என்பதை அவள் உணர்ந்தாள். மேற்கொண்டு ஐந்நூறு பவுன் சேர்த்து அந்தப் பையனுக்கு வெகுமதி கொடுக்கவும் அவள் தயாராக இருந்தாள்.

அவள் அவனை எங்கெல்லாமோ தேடினாள். பல நாட்கள் வரையில் தினசரி மோட்டாரில் சென்று நகர் முழுவதும் தேடிப் பார்த்தாள். ஆனால் அந்தப் பையன் அவள் கண்ணில் பட்டால்தானே !

அந்தப் பையனின் ஞாபகார்த்தமாக, அவன் எழுதிய கடிதத்தைத் தினந்தோறும் பார்ப்பதைத் தவிர அவளால் அவனுக்கு வேறு எவ்வித உதவியும் செய்ய முடியவில்லை.

தன்னிடமிருந்து எவ்விதப் பிரயோஜனத்தையும் நாடாமல் அந்தப் பையன் செய்த பேருதவியை எண்ணியபோது அவள் நெஞ்சம் நைந்து உருகியது. அத்தகைய உத்தம குணம் வாய்ந்த அவன் பரம ஏழையாகவும் துர்ப்பாக்கிய சாலியாகவும் இருப்பது அறிவுக்கு எட்டாத சிருஷ்டியின் புதிர்களில் ஒன்றாக அவளுக்குத் தோன்றியது!.






# 777 சோப்புகள்

சிறப்பாகவும்

சிரமமின்றியும்

சிக்கனமாகவும்

சலவை செய்கின்றன

உங்களது துணிமணிகளுக்கு
நீண்டகாலம் உழைப்பை அளிக்கின்றது

777 'பார்களும், மிக நேர்த்தியான கேக்குகளும்

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., வடாலா, பம்பாய்

S.O.M. 174

CBG/12R.

அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில் - நாள்முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீராக



டால்கம் பவுடர்


பள பளவென்று ஜொலிக்கும் புதுமைக்கு காஷ்மீர் புக்கே டால்கம் பவுடரை உங்கள் மேல் தாராளமாகத் தூவுங்கள். அது அதிகக்கசிவை உறிஞ்சுகிறது . . . எரிச்சலையும் அரிப்பையும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக் குளிமையுடனும் இனிய வாசனையுடனும், நாள்முழுவதும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

# காஷ்மீர் புக்கே

## மாணிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்

1806லிருந்து கோல்கேட் உயர்ந்த ரகத்திற்குப் பெயர்போனது.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 28. சந்தேக விளக்கம்

**கேள்வி** :—சர்வாங்காசனத்தைச் செய்யும்போது நேரத்தைக் கணக்கிடுவது எப்படி? நாடி சுத்தியில் செய்வதுபோல் ஓம் 1, ஓம் 2, ஓம் 3, என்று இம்மாதிரி கணக்கிடலாமா?

**பதில்** :—சர்வாங்காசனத்தைச் செய்யும் நேரத்தைக் கணக்கிட கடிகாரம்தான் நல்லது. நமது பார்வையில் இருக்கும்படி கடிகாரத்தை ஒரு நாற்காலியின் மேல் வைத்துக் கொள்ள வேண்டும். நாடி சுத்தியில் செய்வது போல் ஓம் 1, ஓம் 2, என்று சொல்லலாம். காயத்ரி மந்திரங்கள் சொல்லலாம். அல்லது அவரவர்களுக்குப் பிரியமான மந்திரங்கள், ஸ்தோத்திரங்கள், மகான் வாக்கியங்கள் சொல்லலாம். ஆனால் நமக்கு வேண்டிய நேரம் செய்து விட்டோமா என்று கடைசியில் கடிகாரத்தைப் பார்த்துக் கொள்வதுதான் நல்லது. ஏனெனில் இவைகளைச் சொல்வதில் சிறிது சீக்கிரமாகவும், நிதானமாகவும் சொல்லலா மல்லவா? கடிகாரத்தை வைத்துச் செய்யச் சௌகரியமில்லாதவர்களுக்கு மேற்படி வழி தவிர வேறு வழி இல்லை. நேரம் சிறிது முன் பின் ஆனாலும், ஒன்றும் கெடுதல் நேர்ந்துவிடாது.

**கேள்வி** :—ஆசனங்கள் செய்தும் மலச்சிக்கல் போகவில்லையானால் என்ன செய்வது?

**பதில்** :—ஆகாரத்தில் குறை இருக்கலாம். மிஷினில் தீட்டிய அரிசிக்குப் பதில் தவிட்டுடன் அரிசியை உபயோகியுங்கள். காரத்தை அதிகமாய்ச் சேர்க்கக் கூடாது. தயிர், மோர், நிறைய சாப்பிட வேண்டும். இரவில் ஆகாரத்துடன் இரண்டு மலை வாழைப் பழங்களைப் புசியுங்கள். கோதுமையை உபயோகிப்பவர்கள் முதலில் குத்தித் தவிட்டைப் போக்கிவிடக் கூடாது. மாவரைத்த பின்பும் சலிக்கக் கூடாது. தவிட்டைச் சிறிதும் நீக்காமல் சப்பாத்தி செய்து சாப்பிடுவது நல்லது. பூரி அவ்வளவு நல்லதல்ல. சப்பாத்தியுடன் கீரை வகைகளைச் சேர்த்துச் சாப்பிடலாம். தினமும் ஒரு வகைக் கீரை சாப்பிடுவது நல்லது. இம்மாதிரி ஆகார நியமத்துடன் ஆசனங்கள் செய்து வந்தால் எப்பேர்ப்பட்ட மலச் சிக்கலானாலும் நீங்கி விடும்.

**கேள்வி** :—விரை வாதத்திற்கு எந்த ஆசனம் செய்து வந்தால் நல்லது?

**பதில்** :—சர்வாங்காசனம்தான் மிகவும் ஏற்றது. இதை இருபது அல்லது முப்பது நிமிஷ நேரமாவது செய்யப் பழகிக் கொள்ள வேண்டும். இத்துடன் மத்ஸ்யாசனமும் சிரசாசனமும் செய்யலாம்.

**கேள்வி** :—காரம் கூடாது என்றால், மிளகாய்க் காரந்தான் கூடாதா? மிளகு காரம், இஞ்சி காரம் முதலியனவும் கூடாதா?

**பதில்** :—காரம் என்றால் எல்லாக் காரமும்தான் கூடாது. மிளகாய் அண்ணன் என்றால், மிளகு அதன் தம்பி; இஞ்சியும் அவ்வாறே. ஆனால் எதையுமே சிறிதளவு உபயோகிப்பதில் கெடுதல் ஒன்றும் உண்டாகிவிடாது. சில வியாதிகளுக்கு மட்டும் காரம் முற்றும் நீக்க வேண்டிய தாய் இருக்கும். மிளகாய், மிளகு, இஞ்சி, கடுகு எந்தக் காரமும் உபயோகிக்கக் கூடாது.

**கேள்வி** :—மிளகாய் ரத்தத்தை அபிவிருத்தி செய்யும் என்கிறார்களே! அப்படியானால் அதை ஏன் குஷ்டரோகிகள் சாப்பிடக் கூடாது?

**பதில்** :—மிளகாய் ரத்தத்தை அபிவிருத்தி செய்யும் என்று பொய்ப் பிரசாரம் எப்படியோ நம்மிடை புகுந்து விட்டிருக்கிறது. மிளகாயில் இருக்கும் காரத்தினால் உறுப்புகள் கிளர்ச்சி அடைந்து அதிக ரஸங்களைக் கக்கச் செய்து அதிக வேலை வாங்குமே அன்றி அது ரத்தத்தை அபிவிருத்தி செய்யாது. அப்படி ரத்தம் ஊறுவதானால் பல டானிக்குகள் சாப்பிடுவதற்குப் பதிலாக மிளகாயையே அரைத்துச் சாப்பிடலாமே! தவிர, மிளகாயையே, உபயோகிக்காத மக்கள் உலகில் பாதிக்கு மேல் இருக்கின்றனர். அவர்களுக்கெல்லாம் ரத்தமில்லாமலா போய்விடுகிறது? மிருகங்கள், பட்சி ஜாலங்களுக்கெல்லாம் யார் மிளகாய்ச் சட்னி செய்து வைக்கின்றனர்? மிளகாய் சாப்பிடும் ஜனங்களை விட மிளகாய் உபயோகிக்காத ஜனங்களுக்குப் பல வியாதிகள் வருவதேயில்லை. அப்படி வந்தாலும் மிகவும் குறைந்த அளவில்தான் வருகிறது. முக்கியமாய்க் குஷ்டரோகிகளுக்கு மிளகாயோ மற்றக் கார வஸ்துக்களோ அறவே ஆகாது.

**கேள்வி** :—தினசரி ஒருவன் எவ்வளவு பால் சாப்பிட்டுவர வேண்டும்?

**பதில்** :—குறைந்தது கால்படி அல்லது பதினாறு அவுன்ஸாவது சாப்பிட வேண்டும். அதிகமானால் அரைப்படி வரை சாப்பிடலாம். குஷ்டரோகிகள் இன்னமும் அதிகமாய்ச் சாப்பிட வேண்டும்.

**கேள்வி** :—எருமைப் பால் நல்லதா? அல்லது பசுவின் பால் நல்லதா?

**பதில்** :—பசும் பால்தான் நல்லது. சிலர் எருமைப் பால் நல்லது என்பார்கள். அதில் இதைவிடக் கொழுப்பு அதிகமிருக்கிறது. தவிர பசுக்களுக்கு வருவது போல தொத்து நோய்கள் எருமைகளுக்கு வராது. அதனால் பயமின்றிக் குடிக்கலாம் என்கிறார்கள். அவ்வளவும் வாஸ்தவம்தான். நாம் நமது நாட்டில் பசுவைக் காமதேனுவாகப் போற்றுகிறோம். ஆனால் அதே சமயம் எருமையை எமனின் வாகனமாக எண்ணுகிறோம். இது எப்படி யிருப்பினும் ரோக சாஸ்திரத்தில் பசுவின் பாலும் நெய்யும்தான் விசேஷ



மானேஜர் :—வேலை செய்யும் நேரத்தில் வெற்றிலைப் பாக்கு போடாதீர்கள் என்று எவ்வளவு தடவை சொல்லியிருக்கிறேன்!

குமாஸ்தா :—இல்லையே! நான் வெற்றிலைப் பாக்கு போடும்போது வேலையே செய்வதில்லையே!

